*Madras-Kanyakumari Coastal Road*

* 109 Q.—SRI J. PONNUSWAMY VILLAVARAYAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any representation has been made to the Central Government to convert the Madras, Kanyakumari Coastal road as central highways road; and

(*b*) the reply, if any, received from them in this regard?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Yes, Sir.

(*b*) The final reply of the Government of India is awaited.

திரு. ஜே. பொன்னுசுவாமி வில்லவராயர் : தலைவர் அவர்களே, தற்போது அத்திட்டம் தற்காலிகமாக ஒதுக்கிவைக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறதே? உண்மையா?

கனம் திரு. வி. ராமையா : ஒன்றும் ஒதுக்கி வைக்கப்படவில்லை. இந்திய அரசாங்கத்திலிருந்து பதில் வருவதற்குக் காத்துக் கொண்டிருக்கிறோம்.

MR. CHAIRMAN : Questions are over.

**[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## III.—ANNOUNCEMENTS.

### (1) ELECTION OF A MEMBER TO THE BOARD OF INDUSTRIES.

MR. CHAIRMAN : I have to announce to the House that Sri K. Kamalakannan is the only candidate duly nominated for election to the Board of Industries. As the number of candidates nominated is equal to the number of vacancy to be filled, namely, one, I hereby declare him duly elected to the Board of Industries.

### (2) DECISION OF THE BUSINESS ADVISORY COMMITTEE.

MR. CHAIRMAN : At a meeting of the Business Advisory Committee held at 2–30 p.m. to-day it has been decided that the Council may adjourn to-day and meet again at 3 p.m. on the 30th July 1962. The Committee has decided the following revised programme of business :—

30th July 1962 and 31st July 1962—Appropriation Bill and other Government Bills.

1st August 1962—Non-official day.

The Council will meet at 3 p.m., daily.

## IV.—GENERAL DISCUSSIONON THE BUDGET FOR THE YEAR 1962-63—(*cont.*)

MR. CHAIRMAN : The Hon. the Minister for Finance will now reply to the debate on the Budget.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் தலைவரவர்களே, ஆறு நாள் விவாதத்தில் இந்த மன்றத்தில் பல அங்கத்தினர்கள்—30 பேருக்கு மேல் கலந்து கொண்டார்கள். இந்த நிதிநிலை அறிக்கையில் 7 கோடி 15 லட்சம் ரூபாய் வரை வரி போடுவதாகக் குறிப்பிட்டிருக்கிறபோதிலும், வரியை ஏற்றுக்கொள்கிறவர்கள் நேரடியாகத் தாங்குகிறவர்கள் மற்றவர்கள் எல்லோருக்கும் ஒரு மாதிரி வெறுப்புதான் இருக்கும். ஆனால் அதே மாதிரி போடுகிறவர்களும் வரி போடவேண்டுமென்று ஆசைப்பட்டுப் போடுவதில்லை. எல்லோருக்கும் கஷ்டமாகத்தான் இருக்கும். அப்போப்பட்ட வரி ரூபாய் 7 கோடி 15 லட்சம். கனம் எதிர்க்கட்சித் தலைவரவர்கள் குறிப்பிட்டபடி, மூன்று முகமாக வரி தாக்குகிறது மக்களை. மத்திய அரசாங்க வரி, ஸ்தலஸ்தாபன வரி, ராஜ்ய அரசாங்க வரி—இம்மாதிரி மூன்று பக்கங்களிலிருந்து வருகிறது என்று சொல்வதிலும் உண்மை இல்லாமல் இல்லை. அந்த நிலையில் 7 கோடி 15 லட்சம் ரூபாய்க்கு வரி போடுவதாகத் தெரிவித்திருந்த போதிலும், மொத்தத்தில் இந்த மன்றததில் பேசிய கனம் அங்கத்தினர்கள் சுமுகமான முறையில் பல பிரச்னைகளைக் குறிப்பிட்டார்கள்; விவாதித்தார்கள்; தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்தார்கள்; போடப்போகும் வரிகளைப்பற்றி ஆட்சேபனை தெரிவித்தார்கள். மொத்தத்தில் அதிலே அதிக வேகம், உணர்ச்சி எல்லாம் இருக்கக் கூடும் என்றாலும் அங்கத்தினர்கள் சுமுகமாக விவாதத்தில் கலந்து கொண்டதற்காகவும் சில அரிய கருத்துக்களைத் தெரிவித்ததற்காகவும், சில கருத்துக்களை அரசாங்கம் விளக்குவதற்கு வாய்ப்பளித்ததற்காகவும் நான் என்னுடைய பாராட்டுதலை முதல் முதலாகத் தெரிவித்துக் கொள்கிறேன். 3 20 a.m.

கனம் தலைவரவர்களே, இந்த மன்றத்தில் சில ஆண்டுகள் அங்கத்தினராக இருந்திருக்கிறேன். அது குறித்து நான் பெருமைப்படுவதுண்டு. அதை மற்றவர்களுக்கும் தெரிவிப்பது உண்டு. இந்த மன்றத்துக்கு ஒரு உயர்ந்த தரம் இருக்கிறது. உயர்ந்த தரத்திற்கு எடுத்துக்காட்டாக இருந்து வந்திருக்கிறது என்று நான் மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்வது உண்டு. ஆனால் இந்த விவாதத்தைப்பற்றி நாம் நினைக்கும்போது, ஒரு விசனகரமான விஷயத்தைப்பற்றி குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை.

இந்த விவாதத்தில் கலந்து கொண்ட கனம் அங்கத்தினர் ஒருவர் தகாத வார்த்தைகளைப் பிரயோகித்தார்கள். இதை நான் குறிப்பிட்டிருக்க மாட்டேன். அந்த வார்த்தைகள் பத்திரிகையிலெல்லாம் வந்து விட்டன. பத்திரிகையில் வந்தபிறகு, இந்த மன்றத்தின் நல்ல பெயரைக் காப்பாற்ற வேண்டுமென்று இதைக் குறிப்பிடுகிறேனே தவிர, வேறல்ல. அல்லது பின்னாலே அவரைத் தொடர்ந்து பேசிய அதே கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் யாராவது தங்களது வருத்தத்தைத் தெரிவித்திருந்தாலும்கூட இதை நான் குறிப்பிட்டிருக்க மாட்டேன். தகாத வார்த்தையை—உலக சரித்திரத்தில் எந்த பார்லிமெண்டிலும் உபயோகப்படுத்

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

தாத வார்த்தையை—அவர் மிக துரதிருஷ்டவசமாக இந்த மன்றத்தின் நற்பெயருக்கு இழுக்கு தேடும் முறையில் உபயோகித்தார்.

**திரு. ஆர். வெங்கடாசலம்:** அந்தக் கட்சியைச் சார்ந்த வேறு அங்கத்தினர் இந்த சபையில் இல்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** முஸ்லீம் லீக் அங்கத்தினராக இருக்கலாம். தி. மு. கழகத்தவராக இருக்கலாம். முஸ்லீம் லீகும், தி. மு. க. வும் ஒன்று. இரண்டையும் பிரிப்பதில்லை. இப்போது இரண்டும் ஒன்றுகி இருக்கிறது. அப்படித் தகாத உறவு ஏற்பட்டதால்தான் இந்த மாதிரி வந்தது. முஸ்லீம் லீகாக இருந்தால், இப்படித் தகாத வார்த்தையை உபயோகப்படுத்துவதை நான் சொல்ல மாட்டேன். முஸ்லீம் லீகுக்கும் எனக்கும் அரசியல் வகையில் மாறுபட்ட கருத்து இருந்த போதிலும், முஸ்லீம் லீகைச் சேர்ந்தவர்களைக் குறை சொல்ல மாட்டேன். முஸ்லீம் லீக்—தி. மு. க. உறவு இருக்கிறதே, அது தான் காரணம் இப்படி ஒரு அங்கத்தினர் தகாத வார்த்தையை இந்த மாபெரும் மன்றத்தில் உபயோகிக்க நேர்ந்தது. முஸ்லீம் லீக் என்றுல்—முஸ்லீம் லீக் ஆரம்பிக்கப்பட்டது நாட்டை துண்டிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன்.

கனம் எதிர்க்கட்சித்தலைவரவர்கள் மிகுந்த உணர்ச்சியோடு "இதற்கெல்லாம் இடம் கொடுக்கக்கூடாது; ஏற்கனவே நாட்டைத் துண்டாக்கியதன் விளைவை அனுபவித்து வருகிறோம்" என்று மிக உருக்கமாகச் சொன்னுர்கள். அப்படி ஆரம்பிக்கப்பட்டது முஸ்லீம் லீக். இப்போதும் அதே முஸ்லீம் லீக் என்ற பெயர். அவர்கள் இந்த நாட்டுப் பிரஜை என்று சொன்னுலும், நல்ல எண்ணம் கிடையாது. அதேமாதிரி தான் தி.மு.க. வுக்கும். இந்த நாட்டைத் துண்டிக்க வேண்டுமென்றுல், என்ன அர்த்தம்? கனம் அங்கத்தினர் 'இது எங்கள் உரிமை' என்று சொன்னுர்கள். எது உரிமை? வெள்ளைக்காரன் போய்விட்டான்; பிரெஞ்சுக்காரன், சைனுக்காரனைக் கொண்டுவந்து வைக்க உரிமையா? யார் இதைப் பார்த்துக்கொண்டிருக்க முடியும்? நாட்டை மீண்டும் அடிமைப்படுத்த உரிமையா? தி. மு. க. நாட்டைத் துண்டாட வேண்டுமென்கிறது. தி. மு. க. தலைவர் 'லீகுக்கும் எங்களுக்கும் ஜின்னு காலத்திலிருந்து உறவு உண்டு' என்கிறுர். இப்படி ஒரு நாட்டுக்கு துரோகத்தையும் பாதகத்தையும் விளைவிக்கும் உறவு—அந்த உறவின் விளைவை, நேற்று முன்தினம் கனம் அங்கத்தினர் பேசியபோது நாம் பார்த்தோம்.

DR. A. SREENIVASAN: Is the D.M.K. the only party that is for the division of the country? Is not the parent body, the D.K. fighting for separation of Tamil Nad?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The hon. Member is a specialist on D.K. I have no idea about the D.K. I have no contact with them and I have no idea about their objective.

7th July 1962]

DR. A. SREENIVASAN : Because it is well-known that they are in league with it.

கனம் திரு. எம் பக்தவத்சலம் : அது கனம் அங்கத்தினருடைய கட்சி.

கனம் தலைவரவர்களே, திரு. வகாப் அவர்கள், "சிறுபான்மையினருக்கு அவல நிலை இருக்கிறது. முஸ்லீம்களுக்குக் கவலையாக இருக்கிறது" என்று சொன்னார்கள். இந்த மாநிலத்தில் சிறுபான்மையினர் நலன் பாதுகாக்கப்படுவது போல் வேறு எங்கும் பாதுகாக்கப்படுவதில்லை. அவர்களுக்குப் பாதுகாப்பு மட்டுமல்ல வசதிகளும், சலுகைகளும் அளிக்கப்பட்டு வருகின்றன. பல மாநில முதலமைச்சர்களும் "இந்த மாநிலத்தில்" நீங்கள் சிறுபான்மையினர் நலன் குறித்து போட்ட உத்தரவு நகல் வேண்டுமென்று கேட்டு வாங்கிச் சென்றிருக்கிறார்கள். மத்திய ஆட்சியின் உள்நாட்டு அமைச்சரவர்கள், 'நீங்கள் இட்ட உத்தரவை எனக்கும் அனுப்புங்கள், மற்ற மாநிலங்களுக்கும் அனுப்புகிறேன்' என்று கேட்டு வாங்கிச் சென்றிருக்கிறார். அந்த வகையில் கண்ணுங் கருத்துமாக மொழி, படிப்பு, உத்தியோக விஷயத்திலும், மற்றும் பாதுகாப்பு விஷயத்திலும் நாம் கவனம் செலுத்தி வருகிறோம். 3-30 p.m.

இதிலெல்லாம் நாம் கண்ணும் கருத்துமாகக் கவனம் செலுத்தி வருகிறோம். முஸ்லீம்கள் அவல நிலை என்று சொல்லிக் கொண்டு, ஒரு சமூகத்தின் பெயரால், மதத்தின் பெயரால், இந்த நாடு துண்டாக்கப்பட வேண்டுமென்று சொல்வது, துண்டாக்கப்பட வேண்டுமென்று சொல்கிறவர்களை நாங்கள் ஆதரிக்கிறோம் என்று கூறுவது, நாட்டுக்கு எவ்வளவு துரோகம் விளைக்கக்கூடியது என்பதைச் சிந்திக்க வேண்டும்.

SRI K. S. ABDUL WAHAB : The Hon. Minister has been saying that we support the partitions of the country. That is a false accusation. Our party does not support the partition of the country.

கனம் திரு. எம். பக்தவத்சலம் : முஸ்லீம் லீக் தலைவர் எத்தனையோ முறை சொல்லியிருக்கிறார்கள். தி. மு. கழகமும் நாங்களும் ஒன்று; தி. மு. கழகத்தின் கொள்கைகளை நாங்கள் ஏற்றுக்கொள்ளுகிறோம் என்று பலமுறை சொல்லியிருக்கிறார்.

SRI K. S. ABDUL WAHAB : Sir, the Hon. Minister is making a false accusation.

MR. CHAIRMAN : The Hon. Member will please sit down. The Hon. Finance Minister is replying to the debate. It is an impotrant speech and the Hon. Minister should not be interrupted very often.

கனம் திரு. எம். பக்தவத்சலம் : Let him ask his leader. இங்கே சொல்லுவதில் பயனில்லை. முஸ்லீம் சமூகத்தினர் அப்படியில்லை. அவர்கள் எல்லாம் நாட்டுப் பற்றுடையவர்கள். சமுதாயத்தோடு ஒத்துழைக்கக் கூடியவர்கள். ஆனால் துரதிருஷ்டவசமாக சில பேர் தலைவர்கள் என்று தங்களைக் கூறிக்கொண்டு,

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

சமுதாயத்துக்குத் துரோகம் விளைவிக்கிற முறையில் நடந்து கொள்ளுவதால், இங்கே கனம் அங்கத்தினர் முஸ்லீம்கள் அவல நிலையில் இருப்பதாகக் கூற நேரிட்டுவிட்டது என்று கருதுகிறேன். இம்மாதிரி சமூகத்தின் பெயரால், மதத்தின் பெயரால் செய்வது, அந்த சமூகத்தைச் சார்ந்தவர்களுக்குப் பெருத்த பாதகத்தை விளைவிக்கும் என்பதை, அந்தச் சமூக மக்கள் நன்றாக உணர்ந்து கொள்ளுவார்கள் என்று நான் நம்புகிறேன். அதே நேரத்தில், சிறுபான்மையரது சலுகைகள், உரிமைகள் இவைகளைப் பொறுத்தமட்டில், நான் மீண்டும் உறுதி கூறுகிறேன். இந்த ஆட்சியினர் கண்ணும் கருத்துமாக அவைகளைப் பாதுகாத்துக் கொண்டு வருகிறார்கள். சிறுபான்மையினருக்கு என்னென்ன வசதிகள் செய்திருக்கிறோம், என்னென்ன சலுகைகள் வழங்கியிருக்கிறோம் என்பதற்கு நான் பல திருஷ்டாந்தங்கள் காட்ட முடியும். அவகாசமின்மையால் கூற முடியாததற்கு வருந்துகிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள், "நாட்டுப் பிரிவினை கோர எங்களுக்கு உரிமை இருக்கிறது" என்றார்கள். அதற்கு உரிமை கிடையாது. ஜனநாயகம் என்றாலும், சுதந்திரம் என்றாலும், எதற்குச் சுதந்திரம் இருக்க முடியும் ? நாட்டை அன்னியனுக்குக் காட்டிக் கொடுக்க சுதந்திரம் உண்டா ? நான் கேட்கிறேன். ஆங்கிலேயன் சொல்லாமல் போய் விட்டான், ஜெர்மனிக்காரனை, ஜப்பான்காரனை நாங்கள் அழைத்துக்கொண்டு வருகிறோம் என்றால், அதற்குச் சுதந்திரம், ஓட்டுரிமை உண்டா ? அதை அனுமதிக்க முடியுமா ? யாரும் அனுமதிக்க மாட்டார்கள்; எந்த நாடும் அனுமதிக்காது.

[திரு. எம் பக்தவத்சலம்] தலைவரவர்கள் மன்னிக்க வேண்டும். எந்தக் காலத்திலும் எங்களுடைய கட்சி இன்னொரு அன்னிய ஆட்சியை இங்கு கொண்டு வர வேண்டுமென்று கூறியதுமில்லை, கூறப்போவதுமில்லை; அந்த மாதிரியான கருத்து எங்களுக்குக் கிடையாது என்பதை மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

[திரு. எம் பக்தவத்சலம்] நாட்டைத் துண்டாடவேண்டுமென்று கேட்பதற்கும், அன்னிய ஆட்சியை வரவேற்பதற்கும் அதிக வித்தியாசமில்லை என்பது என்னுடைய கருத்து. அவரவர்களுடைய அபிப்பிராயங்கள் பல இருக்கலாம். திரு. எம். ஜி. ராமச்சந்தரன் அவர்கள் சொன்னார்கள் "நான் ரூ. 2,500 தான் சம்பளம் வாங்குகிறேன்" என்பதாக ரூ. 2,500 வாங்கட்டும், அல்லது ரூ. 5,000 வாங்கட்டும். வருமானவரி கொடுக்கட்டும் அல்லது கொடுக்காமல் இருக்கட்டும் ; அதெல்லாம் அவரவர்களுடைய கருத்து. அவர் எவ்வளவு சம்பாதிக்கிறார் என்பது அல்ல என்னுடைய கவலை. அவர் நன்றாக சம்பாதிக்கட்டும், நிறைய சம்பாதிக்கட்டும், யாராவது நான்கு பேருக்கு உதவட்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். மேலும் அவர் கூறிய ஒரு கருத்தை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். உழைப்பு வேறு, அறிவு வேறு என்பதை

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல் உழைப்புக்கு ஒரு மாதிரியான மதிப்பும் அறிவுக்கு வேறு மாதிரியான மதிப்பும் கொடுக்க வேண்டு மென்பதை என்னல் ஒத்துக்கொள்ள முடியவில்லை. நான் சாதாரண மக்களின் பிரதிநிதி என்ற முறையில் சொல்லுகிறேன்—நான் தொழிலாளர்களுடைய பொறுப்பை யும் ஏற்றுக்கொண்டிருக்கிறவன்—தொழிலாளிக்கு அறிவு இல்லை, அவனிடம் உழைப்புத்தான் இருக்கிறது என்று சொல்வது தவறு.

**திரு. எம்.ஜி. ராமச்சந்திரன் :** தலைவரவர்களே, மீண்டும் குறிக் கிடுவதற்கு மன்னிக்கவேண்டும். நான் சொன்னது, அறிவுக்கு இவ்வளவு சம்பளம் என்ற தரம் கூடாது. உழைப்புக்கு, அதனல் உற்பத்தியாகிற பொருளுக்குத் தரம் விதிக்க முடியும்; அறிவுக்குத் தரம் விதிக்க முடியாது, தகுதி விதிக்க முடியாது என்றுதான் சொன்னேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் அங்கத்தினர் அவர்களும் உழைக்கிறவர்கள்தான். நடிப்பதில் உழைப்பு, அருமையான உழைப்பு இருக்கிறது. அறிவோடு மாத்திரமல்லாமல், உழைப் பும் இருக்கிறது. அவர் உழைப்பை மதிப்பதைப்பற்றி மகிழ்ச்சி யடைகிறேன். ஆனல் அதே நேரத்தில் அறிவுக்கும் ஒரு மதிப்பீடு வேண்டும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கேட்டதை யெல்லாம் வேறு வழியில்லாமல் கொடுக்கிருர்கள் என்பதற்காக, அறிவின் பெயரால் சுரண்டக்கூடாது.

கனம் அங்கத்தினர் எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள் இன்னென்று சொன்னர்கள். பல பேர் இந்த வரி போடுவதை எதிர்த்து வரிகொடா இயக்கம் நடத்துவோம் என்கிருர்கள் என்பதாகத் தெரிவித்தார்கள். நான் அவரைக் கேட்டுக் கொள்ளுவேன், நீங்கள் சரித்திரத்தைப் படிக்க வேண்டும். அதிலும் குறிப்பாக இந்த நாடு சுதந்திரம் பெற்ற சரித் திரத்தைப் படிக்க வேண்டும். வரி கொடா இயக்கம் என்பது யார், ஏன் நடத்தினர்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவர் சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். ஏனென்றல் அவரிடம் உயர்ந்த கலைத்திறன் இருக்கிறது, அறிவு இருக்கிறது; ஆனல் இன்னும் கொஞ்சம் அதிகமாக இந்த வரலாறுகளைப் படிக்க வேண்டுமென்று தாழ்மையோடு கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்து, இந்த நிதி நிலை அறிக்கையின் மீது விவாதத்தைத் துவக்கிய கனம் அங்கத்தினர் திரு. பாலசுப்ரமணிய ஐயர் அவர் களுக்குச் சொல்ல விரும்புகிறேன். முந்தைய ஆண்டுகளில் நாங்கள் வரி விதிக்க முற்பட்டபோது, இந்த மன்றத்தில் பலத்த எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. அத்தகைய எதிர்ப்பு இந்த ஆண்டு வரி விதிப்பின் மீது இந்த மன்றத்தில் யாரும் காட்டவில்லை. அதை நான் குறையாகச் சொல்லவில்லை. இப்போது போடப்பட இருக்கிற வரிகள் அத்தன்மையானது என்று எடுத்துக்காட்டத் தான் குறிப்பிடுகிறேன். சாதாரணமாக, பலமாக எதிர்க்கக் கூடியவர்கள்கூட, இந்த ஆண்டு போட உத்தேசிக்கப்பட்டிருக்கிற வரிகளைப்பற்றிக் குறை கூறவில்லை என்பதை எடுத்துக்காட்ட

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

விரும்புகிறேன். ஒரே ஒரு அங்கத்தினர், கனம் கரையாளர் அவர்கள் தான் எல்லா வரிகளேயும், வரவேற்பதாகச் சொன்னர். அதேமாதிரி மற்றொரு அங்கத்தினர் திரு. சம்பந்தம் அவர்கள், இந்தப் புது வரிகளெல்லாம் தேவையில்லை; தணிக்கை அறிக்கை யில் (Audit Report) எடுத்துக் கூறப்பட்டுள்ள குறைகளேச் சரிப் படுத்திவிட்டால் போதும், அதிலேயே பணம் கிடைத்துவிடும் என்று சொன்னர். 'Audit Report 1962' இப்போதுதான் வந்திருக் கிறது. அந்த அறிக்கை 1961-ம் வருடத்தியதுதான். திரு. O. P. ராமசாமி ரெட்டியார்கூட கேட்டார் '1962' என்று போடப் பட்டிருக்கிறதே என்று. Public Accounts Committee அறிக்கை யோடு கூடத்தான் Audit Report வரும். அந்த வருடத்தைத் தான் போடுவது வழக்கம். Audit Report- -ல் சில தவறுகள் (Irregularities) எடுத்துக் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. இதை யெல்லாம் கனம் அங்கத்தினர் திரு. பாலசுப்ரமணிய ஐயர் எடுத்துக்காட்டினர். எல்லா அலுவல்களும் சரியாக நடக்க வேண்டுமென்ற கவலையில் அவர் சொன்னர். Audit Report- -ஐப் பார்த்தால் 31—8—1961 வரையில் 39,847 தவறுதல்கள் Irregularities ஏற்பட்டிருக்கின்றன என்பதை அறிகிறோம். அந்த Irregularities -ல் சம்பந்தப்பட்ட தொகை எவ்வளவு என்று கூட்டிப் பார்த்தால் 23 கோடி 97 லட்சம் என்று வரும். அவ்வளவு தொகையையும் சாப்பிட்டுவிட்டார்கள் என்று அர்த்த மல்ல. Competent authority யின் சாங்ஷன் இல்லை. சாங்ஷன் வேண்டும் என்பன போன்ற குறைபாடுகள்தான். கம்பெனி நடத்துகிறவர்களுக்குத் தெரியும். ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலவு செய்ய தீர்மானம் இல்லையே என்று Auditor கேட்டால், பின்னல் அதை நிவர்த்திக்க தீர்மானம் போட்டால் போதும். இதே மாதிரி பல இனங்கள் Audit Report -ல் சுட்டிக்காட்டப் பட்டிருக்கின்றன.

**A sum of Rs. 15 crores relates to non-submission of detailed** contingent bills 'payees' receipts, etc. These objections are to be **eventually cleared on submission of detailed contingent bills.**

இது ஒரு 15 கோடி ரூபாய். இந்த மாதிரி இனங்களைக் கணக்குப் போட்டுக் கொண்டே போய், பத்திரிகையில் கொட்டை எழுத்தில் எழுதினல் 50 கோடி ரூபாய் பாழாயிற்று என்ற பீதி உண்டா கிறது. ஆகையினல் முதலில் நரம் நிலைமை என்ன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். AuditReport-ல் தவறுதல் (Irregularities) என்று எடுத்துக்காட்டப்பட்டால், அதற்கு மேல் Public Accounts Committee இருக்கிறது. அந்தக் குழுவிற்கு எதிர்கட்சித் தலைவரை, தலைவராக நியமித்திருக்கிறோம். மற்ற மாநிலங்களில் அப்படிப் போடுவதில்லை. Public Accounts Committee -க்கு ஆளுங்கட்சித் தலைவர்தான் தலைவராக இருப்பார். நாம் ஒரு Convention -ஐ ஏற்படுத்தியிருக்கிறோம். Public Accounts Committee -ல் (Audit Report) சுட்டிக்காட்டப்பட்டுள்ள Irregularities பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

பட்டதும் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அதற்கு விளக்கம் சொல்லு Public Accounts Committee ஒத்துக்கொள்ளும். விளக்கம் ஒத்துக்கொள்ளத்தக்கதாக இல்லாவிட்டால், என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று Public Accounts Committee தன்னுடைய அறிக்கையில் தெரிவிக்கும். Public Accounts Committee ரிப்போர்ட் வந்த பிற்பாடு, அதிலும் குறைபாடுகள் சுட்டிக் காட்டப்பட்டிருந்தால், என்ன செய்யப்போகிறீர்கள் என்று எங்களைக் கேட்கலாமே ஒழிய, Audit Report -ல் சொல்லப்பட்டிருக்கிற (Irregularities) -ஐ வைத்துக்கொண்டு, பணம் பாழ்படுத்தப்பட்டிருக்கிறது என்று சொல்லுவது முறையல்ல. ஆகையால் கனம் அங்கத்தினர் திரு. சம்பந்தம் அவர்கள் Audit Report- ஐப் பார்த்து இந்த இனத்தில் 16 கோடி ரூபாய் வீணாயிற்று, அடுத்த இனத்தில் 23 கோடி ரூபாய் வீணாகி இருக்கிறது, இரண்டையும் சேர்த்தால் 39 கோடி ரூபாய் ஆகிறது. இந்தப் பணத்தை மிச்சப்படுத்தினால், இதை வைத்துக்கொண்டு, வரி போடாமல் பற்றாக் குறையைச் சரிப்படுத்திவிடலாம் என்று சொல்லுவது சரியல்ல. கனம் அங்கத்தினர் திட்டம் வேண்டாம் என்று சொல்லவில்லை. எதற்கு கல்விக்கு இவ்வளவு தொகை; அந்தச் செலவைக் குறையுங்கள் என்று சொல்லவில்லை.

**திரு. எஸ். கே. சம்பந்தம்**: தலைவரவர்களே, நான் சொன்னதெல்லாம், வீணாக விரயம் ஆக்கப்பட்டிருப்பதாகத் தணிக்கை அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிற இனங்களை இனிமேலாவது நீக்கி, பணத்தை விரயம் ஆக்காமல் அளவோடு திட்டமிட்டால், பணம் மிச்சப்படும்; அதை ஏன் ஒரு ஆண்டு பரீட்சை பண்ணி பார்க்கக்கூடாது என்பது என்னுடைய கருத்து, வரி வேண்டாம் என்று நான் சொன்னதில்லை.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்**: கனம் அங்கத்தினர் நேற்றுச் சொன்னதைத்தான் திரும்பச் சொல்லுகிறார். நேற்று அவர் பேசியதைப் புரிந்து கொண்டுதான் நான் பேசுகிறேன்.

திரு. க. அன்பழகன்: தலைவர் அவர்களே, இங்கே தரப்பட்டிருக்கிற நிதி நிலை அறிக்கையின் மீது மிக முக்கியமாகத் தெரிவிக் 3-40 p.m.
கப்பட்ட கருத்து, செலவு வரவுக் கணக்குப்படி எஸ்டிமேட் அளவு உண்மையாக எவ்வளவு ஆகுமோ அதிலிருந்து வேறுபட்டதாக இருக்கிறது. அதனால் சப்ளிமெண்டரி கிராண்ட் தொகை தேவைப்படாமலேயே கேட்கப்பட்டிருக்கிறது. தேவைப்படாமல் கேட்கிற நிலைமை இருந்தால் வரவு செலவுத் திட்டப் புள்ளியில் இந்த ஏழு கோடி ரூபாய்க்கு வரி போடுவது தேவைப்படுமா என்பதை அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா?

**கனம் திரு. எம்.. பக்தவத்சலம்**: திரு. பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் குறிப்பிட்டார்கள். மற்றவர்களும் சொன்னார்கள். "Inflation of expenditure and underestimate of revenues" என்று. செலவுகளை அதிகப்படுத்திக் காட்டுகிறோம், வரவைக் குறைவாகக் காட்டுகிறோம் என்கிறார்கள். அப்படிக் காட்டவேண்டுமென்று

என்ன அக்கறை? வரி போட்டு அதில் ஒரு கிரீடம் வைத்துக் கொள்ள வேண்டுமென்று? அப்படி வரவைக் குறைத்துக் காட்டி செலவை அதிகப்படுத்திக் காட்டி வரிக்கு இடமிருக்கிறது என்று காட்டுவது அரசாங்கத்திற்கு விளையாட்டா, அல்லது அதில் என்ன ருசி யிருக்கிறது? எதற்கு செலவை அதிகப்படுத்திக் காட்டு கிறோம்? அதற்கு உதாரணமாகச் சொல்ல வேண்டுமென்றால், சென்ற வருஷத்திலே டெபிசிட் எஸ்டிமேட் 6.96 லட்சம். ஆனால் ஆக்சுவல் டெபிசிட் 8,50 லட்சம், ஏன்? செலவு அதிகமாகியிருக் கிறது? முதலில் மதிப்பிட்டதிலிருந்து அது குறையவில்லை. சில சமயங்களில் குறையலாம். செலவு செய்யப்படவில்லை என்றெல் லாம் சில அங்கத்தினர்கள் சொல்கிறார்கள். செலவு செய்யப்பட்டவற்றை அங்கத்தினர்கள் பாராட்டவேண்டும். இந்தப் புகார் பற்றி நாம் அதிகாரிகள் தவறுதலான கருத்துக் கூடக் கொள்ளலாம். 6,96 லட்சம், 8,50 லட்சம் ஆக அதிகமாக ஆகியிருக்கிறது. வருமானம் உயர்ந்துகொண்டே இருக்கிறது. உயர்ந்து வருவதை நாம் பார்க்கிறோம். சில இடங்களில் **leakage** இருக்கிறது. **evasion** இருக்கிறது என்று சொன்னார்கள். வரு மானத்திற்கு விதிக்கக்கூடிய வரியைப்பற்றி அவ்வப்போது கவனித்துக்கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் முக்கியமாக நமக்கு வரக்கூடிய வரி விற்பனை வரி. அதுவும் அவ்வப்போது கவனிக்கப்பட்டு வருகிறது. சில நாட்களுக்கு முன்புகூட வருமான வரி சம்பந்தப்பட்ட மாநில அதிகாரிகள் எல்லோரையும் அழைத்து தொழிலமைச்சர் அவர்களும் நானும் சந்திக்க நேர்ந்தது. முதலமைச்சர் அவர்களும் வந்திருந்தார்கள். அங்கிருந்த அதிகாரிகளிடத்தில் அதிக நேரம் பேசினோம். ஒழுங்காக வசூலிக்கவேண்டும், எவேஷனுக்கு இடம் கொடுத்து விடக்கூடாது என்றெல்லாம் பேசினோம். அவர்களுக்குள்ள கஷ்டங்கள், அவர்களுக்கு வேண்டிய வசதிகள் இவற்றையெல்லாம் கண்டு அவற்றிக்குப் பரிகாரம் செய்யலாம் என்றுதான் செய்கிறோம். எவ்வளவு அதிகப்படுத்த முடியுமோ அதைக் கணக்குப்போட்டிருக்கிறோம். பிறகு எப்படி அதிகமாகத் துண்டு விழுந்தது? நாம் குறைத்து போடவில்லை. செல வினத்தை அதிகப்படுத்தியும் போடவில்லை. டெபிஸிட் 6,96 லிருந்து 8, 50-க்கு உயர்ந்ததிலிருந்து இது தெரியவரும். எது அனுவசியமான செலவு? கனம் பாலசுப்ரமணிய அய்யர் அவர் கள் **Piggery** எதற்கு, அப்பளம் எதற்கு என்று சொன்னார் கள். அதைச் சாப்பிடுகிறவர்கள் இருக்கிறார்கள். அதுவும் வேண்டியதாகத்தான் இருக்கிறது. பிரைவேட் செக்டார், பப்ளிக் செக்டார் கருத்து சிலரிடம் இருக்கிறது. மத்திய அரசாங்கமும் இந்த அரசாங்கமும் அவற்றை ஏற்றுக்கொள்ள முடியாது. இரண் டிற்கும் இடமிருக்கிறது. எல்லாவற்றையும் அரசாங்கம் தலையில் போட்டுக்கொண்டு செய்யவேண்டுமென்று என்னஅவசியம்? கனம் தொழில் அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்று நம்பு கிறேன். அரசாங்கம் திறமையாக எதையும் செய்யும் என்ற அகம் பாவம் எங்களுக்கு இல்லை. முதலீடு தனியாரிடம் இருக்கிறது.

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

நாம் வரி வசூலிக்கிறோம். நல்ல முறையில் தொழில் நடக்கிறது எல்லாவற்றையும் நேஷனலைஸ் செய்யவேண்டும். பிரைவேட் செக்டாரே கூடாது என்று சொல்வதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள முடியாது. அப்பளமாக இருந்தாலும் அதையும் சிலர் செய்து பிழைக்கிறார்கள். அற்ப விஷயம்தான். ஏழைகளுக்கு உளுந்து மாவு ரொம்ப சத்துள்ளது. நிறைய உற்பத்தி ஆக்கவும் முடியாது. அதை உபயோகிப்பதில் சிரமமிருக்காது. நெருப்பில் சுட்டுச் சாப்பிட்டால் சத்து இருக்கிறது. அதையும் குடிசைத் தொழிலாக நடத்தலாம் என்று நாம் காட்டவேண்டும். பிக்கரி என்றால் அதைச் சாப்பிடாமல் இருக்கிறவர்களுக்கு அது வெறுப்பாக இருக்கலாம். சாப்பிடுகிறவர்களும் இருக்கிறார்கள். அந்தத் தொழிலையும் நாம் அனாவசியமாகத் தலையில் போட்டுக்கொண்டு அனாவசியமாகச் செலவு செய்கிறோம் என்று சொல்வது சரியல்ல.

கனம் அங்கத்தினர் பாலசுப்ரமணியம் அய்யர் அவர்கள் விதைப் பண்ணையைப்பற்றிச் சொன்னார்கள். விதைப் பண்ணை என்றால் அதை ஒரு இன்டஸ்ட்ரி மாதிரிச் செய்ய முடியாது. விவசாயத்தில்கூட அது முடியாது. விதைப் பயிர் இடுவது என்றால் அதில் லாபம் வருமென்று சொல்ல முடியாது. அதற்குத் தகுந்த நிலம் வேண்டும். நிலம் அக்கொயர் செய்வதை நிலச் சொந்தக்காரர்கள் எதிர்ப்பார்கள். நல்ல நிலமாக இருக்க வேண்டும், சத்துள்ள மண்ணாக இருக்கவேண்டும். பருவ மழை வேண்டும். அதனால்தான் இத் திட்டத்தை எப்படி நிறைவேற்றவேண்டுமென்று சில இடங்களில் குத்தகைக்கு எடுத்து செய்தோம். அதில் நஷ்டமாயிற்று. எஸ்டிமேட் கமிட்டி யோசனை சொன்னார்கள். வேண்டாமென்று அவர்கள் சொல்லவில்லை. அகில இந்தியாவிலும் அது ஒப்புக்கொள்ளப்பட்ட திட்டம். தனிப்பட்ட விவசாயிகளிடத்தில் அதைக் கொடுத்துச் செய்யச் சொன்னால் அப்போது சுத்தமான விதைகள் கிடைப்பதில்லை. ஆகையால் மறுபடியும் பரிசீலனை செய்தார்கள். அரசாங்கத்தில் கமிட்டி போட்டிருக்கிறோம். நிபுணர்கள் தமிழ்நாடு பூராவும் சுற்றி 210 போதுமென்று சொன்னார்கள். முதலில் 360 வேண்டுமென்று திட்டக்குழுவில் அபிப்பிராயப்பட்டார்கள். பிறகு 210 போதுமென்றதும் அதை ஒப்புக்கொண்டோம். அந்தக் கமிட்டி சொன்னதையெல்லாம் நிறைவேற்றி வருகிறோம். நான் இது குறித்து நிதிநிலை அறிக்கையில்கூட குறிப்பிட்டிருக்கிறேன். அதை பலன்தரத்தக்க வகையில் இருக்கின்றன. அது ஒரு நல்ல திட்டம்.

அடுத்தபடியாக ஜப்பானிய விவசாய முறை. சாதாரணமாக எந்தக் கிராமத்திற்குப் போனாலும், விவசாயிகளைக் கேட்டால் அந்த முறையின் மூலம் உடனடியாகப் பலன் கிடைக்கிறது என்றுதான் சொல்கிறார்கள். ஜப்பானியத் திட்டம் என்றால் அதை அப்படியே கண்ணை மூடிக்கொண்டு ஆதரித்து விடுவது என்பது அல்ல. அது தமிழ்நாட்டுக்கு ஏற்றவகையில் கையாளப்படுகிறது. லட்சக்கணக்கான ஏக்கரில் அதை விஸ்தரிக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். நல்ல திட்டம் என்று உணர்ந்த பிறகு

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

இப்போது வரி போடுகிறோம் என்றால் 9½ கோடி ரூபாய் யாரோ சொல்கிறார்கள் என்பதற்காகத் திட்டம் போடுவதில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்போது வரி போடுகிறோம் என்றால் 9½ கோடி ரூபாயுக்கு வருவாயுக்கு மேல் செலவாகிறது, இந்தத் திட்டங்களினால். இது இல்லாமல் அதாவது வருவாய் போதிய அளவு இல்லாமல் இன்னும் எத்தனையோ திட்டங்களை அடுத்த ஆண்டு பார்த்துக்கொள்ளலாமென்று ஒத்தி வைத்திருக்கிறோம். எல்லாம் அவசியமான திட்டம். மக்கள் எதிர்பார்க்கிற திட்டம்தான் எல்லாம். இப்போதே எங்கள் தாலுக்காவுக்கு, எங்கள் ஜில்லாவுக்கு அந்தத் திட்டம் வேண்டும், இந்தத் திட்டம் வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவையெல்லாம் அவசியமில்லை என்று ஒதுக்கிவைக்கவில்லை. அதற்குப் பணம் இல்லாததுதான் காரணம். அதனால் இந்தத் திட்டங்களின்படி எதையும் விட்டுவிட மக்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அது முறையுமல்ல, நியாயமுமல்ல. மக்கள் நீண்டகாலமாக நன்மைகளை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் பழைய காலத்தைப்போலத்தான் இருக்கிறது என்று எதிர்க்கட்சி அங்கத்தினர் திரு. எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள், பக்கத்திலுள்ள கே. ஆர். ராமசாமி அவர்கள் எல்லாம் பேசினார்கள். அது இல்லை, இது இல்லை என்று பேசினார்கள். கடைசியில் காந்தியடிகளை மேற்கோள் காட்டிச் சொன்னார்கள். காந்தியடிகள் கொள்கையை திரு. ராமசாமியிடமிருந்துதானா நாங்கள் கற்றுக்கொள்ளவேண்டும். "Devil quoting scripture" என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். நான் சொல்கிறதில்லை இது. திரு. ராமசாமி அவர்களிடமிருந்து நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டிய நிலையில் இல்லை.

**திரு. க. அன்பழகன்:** அவர் நினைவூட்டினார்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** நினைவும் தேவையில்லை. எங்களுக்கு எப்போதும் நினைவுண்டு. எல்லா நிலைமையும் அப்படியேதான் இருக்கிறது, ஒன்றும் முன்னேற்றம் நடக்கவில்லை என்று சொல்கிறார்கள். பத்து வருஷங்களுக்கு முன் நடந்த மாதிரியா இப்போது நடக்கிறது? பத்து வருஷங்களுக்கு முன் சினிமாவுக்குப் போகிறவர்கள் இப்படியா இருந்தார்கள்? இப்போது இருக்கிறவர்கள் எப்படியிருக்கிறார்கள்? நான் சினிமாவுக்குப் போவதில்லை. எம். ஜி. ஆர். போன்றவர்கள் கூப்பிட்டால் நான் போகிறேன்.

3-50 p.m. சினிமாவுக்குப் போகிறவர்களைக் கேட்கிறேன். அந்தத் தோற்றம் இன்று கிராமத்தில் இருக்கிறதா? கிராமத்தில் ஷர்ட் போடாதவன் யார்? இரவு 10 மணிக்குக் காரில் வரும்போது பார்க்கிறேன். ஷர்ட் போடாதவர்கள் யாருமே இல்லை. இப்படி இருந்ததா 15, 20 வருஷங்களுக்கு முன்பு?

**திரு. க. அன்பழகன்:** அமைச்சரவர்கள் சுதந்திரம் அடைந்த பிறகு ஏற்பட்ட வளர்ச்சியை எடுத்துச் சொல்கிறார்கள். நான்

7th July 1962] [திரு. க. அன்பழகன்]

1922-ல் பிறந்தவன். 1922-லிருந்து 1947 வரை இப்பேர்ப்பட்ட முன்னேற்றம் இல்லாமல் இருந்ததா என்று கனம் அமைச்சரவர்களைக் கேட்கிறேன்.

**கனம் திரு. எம் பக்தவத்சலம்:** கனம் அங்கத்தினர் வேறு வகை. அப்போது இதெல்லாம் தெரியாது அவருக்கு. அப்போது என்னத்தைப் பார்த்திருக்கப்போகிறார்? அன்னியன் ஆட்சியை நான் அடியோடு குறைகூற மாட்டேன். அன்னிய ஆட்சியில் நாம் கண்டது என்ன? இந்த 15 ஆண்டுகளில் கண்டதென்ன? இன்றைய தினம் தமிழ்நாடு தொழில் வளர்ச்சியில் large-scale industries வளர்ச்சியில் மூன்றாவதாக நிற்கிறது—மகாராஷ்டிரம், மேற்கு வங்காளம், அடுத்தது தமிழ்நாடு. பிரிட்டிஷ் ஆட்சியில் வளர்ச்சி தமிழ் நாட்டில் ஒன்றுமில்லை. பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்லைத் தவிர வேறு என்ன இருந்தது தமிழ் நாட்டில்? பின்னால் தொழில் அமைச்சர் விவரம் சொல்வார்கள். அல்லது அந்த மன்றத்தில் அறிவிக்கும் அறிக்கையை இந்த மன்றத்திலும் வழங்கலாம் என்று தொழிலமைச்சருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தொழில் வளர்ச்சியில் இன்று "National Council of Applied Economic Research" செய்த survey -ல் அவர்கள் சொல்வது என்ன?

"The Economic Survey Report says that of the full working force 11·7 per cent are engaged in industry in Madras, but the All-India percentage was only 9.8 per cent.

In industrial output, the share of large-scale industry was more than half or 55 per cent in Madras while the figure for All-India is 48 per cent.

The Economic Survey Report observed that Madras ran third among the industrially developed States in the country. Maharashtra and West Bengal alone are more industrially advanced than Madras."

இவ்வாறு மேற்கு வங்காளமும் மகாராஷ்டிராமும் தமிழ் நாட்டைவிட அதிகமாக முன்னேறி இருக்கின்றன என்றால், அவை பிரிட்டிஷ் ஆட்சியில்தான் விரிவடைந்தன.

**திரு. க. அன்பழகன்:** எல்லாம் இந்தியாவில்தான் இருந்தன.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** நாம் எப்போதும் 'தாசர்கள்' என்று தெரியும். அதனால்தான் தமிழ் நாட்டில் ஒன்றும் பண்ணவில்லை. 'தமிழ் நாட்டில் நம்ம ஆள் இருக்கிறான்; அதனால் எதுவும் செய்யலாம்' என்று தெரியும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு அதனால் தமிழ் நாட்டில் industries இல்லை. 1947-50-க்குப் பிறகு வளர்ந்தது. அதிகமான வளர்ச்சி 1954-க்குப் பிறகு. இங்கே

ஒரு வறட்சி, ஒன்றுமே இல்லை, வாழ்க்கைத் தரம் உயரவில்லை என்று சொல்வது தெரியாதவர்கள் சொல்வது அல்லது ஏதோ ஒரு விவாதத்துக்கு சொல்வது, தங்கள் கட்சிக்காகச் சொல்வது. ஆனால், நிலைமை அது இல்லை என்பதை மக்கள் உணர்ந்திருக்கிறார்கள்.

அந்த வகையில் விவசாயத் துறையை எடுத்துக்கொள்ளுங்கள். விவசாயத்தில் இப்போது எவ்வளவு தூரம் முன்னேற்றமடைந்திருக்கிறோம்? நாம் அபிவிருத்தி அடைந்து வருகிறோமா இல்லையா என்று தெரிந்து கொள்ளாமல் மேலும் அபிவிருத்தி அடைய முடியாது. அதற்குத் தான் திட்டங்களில் நாம் எவ்வாறு சாதித்திருக்கிறோம், மக்கள் எப்படிப் பலனடைந்து வருகிறார்கள், வாழ்க்கைத்தரம் எவ்வாறு உயர்ந்திருக்கிறது என்பதை விளக்கியிருக்கிறேன். அதைச் செய்வதுடன் மட்டும் திருப்தி அடைய முடியுமா? இன்னும் எவ்வளவோ வாழ்க்கைத் தரம் உயர வேண்டும். அதற்குத் தகுந்த திட்டங்களை நிறைவேற்றித்தானே ஆகவேண்டும்? ஒரு திட்டத்துக்குத் திட்டம் கொஞ்சம் சாவதானம் வேண்டாமா என்றால், மக்கள் அதை விரும்புவார்களா? இன்றைக்கு விருந்து போட்டேன். நாளைக்குப் பட்டினி என்றால் யார் ஒப்புக்கொள்வார்கள்?

**திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்:** வயிறு கெட்டுப் போனால், விரும்பமாட்டார்கள்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** வயிறு கெட்டுப் போனால் அது வேறு விஷயம்.

நாம் எப்படி முன்னேற முடியும்? நாம் தொடர்ந்து நிறைவேற்றவில்லை என்றால், tempo போய்விடும். இரண்டு வருஷம் ஆயிற்று, ஒரு வருஷம் holiday கொடுப்போம் என்றால் எப்படி வளர முடியும்? Tax -க்கு holiday கொடுக்கலாம்; புதிதாக ஆரம்பிக்கும் தொழிலுக்கு, திட்டத்துக்கு முடியாது. அதனால் திட்டத்தைத்தொடர்ந்து நிறைவேற்ற வேண்டும். அந்தத் திட்டத்தை மேலும் மேலும் பெரிய திட்டமாகத்தானே போட வேண்டும்? எதிர்கட்சி கனம் தி.மு.க. தலைவர்கள், "ரூ. 291 கோடி திட்டம் என்றால் போதாது, ரூ. 1,000 கோடி வேண்டும்" என்றார்கள். நாங்கள் அதை மற்ற மாநிலங்களுடன் ஒப்பிட்டு பார்த்து அந்த விகிதாசாரம் ரூ. 291 கோடி என்று முடிவு செய்தோம். அதை எப்படி குறைத்துக்கொள்வது? இந்த மன்றத்திலேயே நான் குறிப்பிட்டிருக்கிறேன். சென்ற ஆண்டில் மூன்றும் திட்டத்தைப் பற்றி பேசும்போது. 30 முதல் 45 கோடி வரை விசேஷ வருவாய் கண்டுபிடிக்கவேண்டியிருக்கிறது என்று சொன்னேன். மத்திய அரசாங்கத் திட்டக்குழு ரூ. 45 கோடி மதிப்பிடுகிறார்கள் என்று அப்போதே தெரிவித்திருக்கிறேன். இன்று வருவாய்க்கு என்ன செய்வது?

கடன் கொடுக்கிறோம் விவசாயிகளுக்கு. கடன் கொடுப்பது கூட தப்பு என்றால் எப்படி? சில சமையத்தில் குறைந்த வட்டிக்குக் கொடுக்கிறோம். தவணைப்படி வசூல் செய்வதில் கஷ்டம்

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

இருக்கிறது. மழை இல்லை என்றால் வரியை வஜா செய்ய வேண்டியிருக்கிறது. இதை எல்லாம் செய்தால் தானே திட்டத்தை நிறைவேற்ற முடியும்? நிலத்தின் குத்தகைக்காரர்களுக்குக் கூடகடன் கொடுக்கிறோம், நாம் கோவாப்பரேடிவ் சொசைட்டிக்கு "உங்களுக்கு நஷ்டம் வந்தால் நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம்" என்று உத்தரவாதம் கொடுக்கிறோம்.

அப்படித்தான் செய்யவேண்டியிருக்கிறது. எத்தனை பேருக்கு நிலம் இருக்கிறது? நிலம் இல்லாதவர்கள் எவ்வளவு பேர்? 3 கோடியில் 63 லட்சம் பேர்தான் ஏதாவது நிலம் வைத்திருக்கிறவர்கள். 1 ரூபாய், 10 ரூபாய், 100 ரூபாய் வரி கொடுக்கிறார்கள், ஜமீன் ஏரியா சேர்த்துப் பார்த்தாலும் 63 லட்சம் பேர்தான் இருப்பார்கள். நிலமில்லாதவர்களுக்கும், நிலம் உள்ளவர்களுக்கும், ஏழை விவசாயிகளுக்கும் கடன் வசதிகூட கொடுக்கக்கூடாது என்றால், என்ன செய்வது? Full finance scheme ஏற்படுத்தியிருக்கிறோம். பல அங்கத்தினர்கள் எல்லா ஜில்லாக்களுக்கும் அதை அமுலுக்கு கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். எவ்வளவு தூரம் விவசாயிக்கு வசதி அளிக்க முடியுமோ, அவ்வளவு தூரம் செய்கிறோம்.

வசதிகள் கொடுப்பதில் Bull-dozer tractors கொடுப்பதில் —இதிலெல்லாம் நஷ்டம் தான். ஏதோ hire -க்கு என்று கொடுத்தாலும், அது நஷ்டந்தான். இதைக்கொடுக்காவிட்டால் விவசாயி எப்படி விவசாயம் செய்யமுடியுமா? பலர் எனக்கு இது போதாது, இன்னும் அதிகமாக tractor கொடுங்கள் என்று வற்புறுத்தி வருகிறார்கள்.

கனம் அங்கத்தினர் திரு. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் ஒரு கவலை தெரிவித்தார்கள். 'நில வரி அதிகப்படுத்தப்படுவதால் நில உச்சவரம்புச் சட்டத்திலும் மாறுதல் இருக்குமோ என்று. அந்தச்சட்டம் அப்படியே இருக்கும். அதைத்திருத்தப் போவதில்லை. அது அமுலுக்குவந்துவிட்டது. Notified date நிர்ணயம் பண்ணியாகிவிட்டது. எதற்கு வரி போடுகிறோம்? தண்ணீர் தீர்வையைத்தானே அதிகப் படுத்துகிறோம்? Ceiling Act Provision ஏதும் பாதிக்கப்பட மாட்டாது என்று சொல்ல விரும்புகிறேன். 4-00 p.m.

இந்தப் புது வரிகள் விதிப்பதை இன்னும் கொஞ்ச காலத்திற்குத் தள்ளி போடுங்கள், "Wmy not postpone taxation" என்று சில அங்கத்தினர்கள் கேட்டார்கள். அவர்களுக்கு நான் கூற விரும்புகிறேன். நம்முடைய மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு இந்த வருடத்தில் நமக்கு ரூ. 5.27 கோடி தேவைப்படுகிறது. இதில், ரூ. 31.04 கோடி நமக்கு மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கிறது. அவர்களும் நமக்குக் கணிசமான அளவுக்கு உதவி செய்துகொண்டுதான் இருக்கிறார்கள். இருப்பினும் நம்முடைய திட்டங்களை முழுதும் நிறைவேற்ற வேண்டுமானால், வருவாயை அதிகப்படுத்த வேண்டியிருக்கிறது. ஆகையினால்தான் இந்தப் புதிய வரிகளை விதிக்க முற்பட்டிருக்கிறது அரசாங்கம்.

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

கனம் அங்கத்தினர் டாக்டர் சிவானந்தம் ஏன் அனுவசியமாக உயர்நிலைப்பள்ளிகள் அதிகமாக வைக்க அனுமதி அளித்திருக்கிறீர்கள் என்று கேட்டார். இன்றைக்கு கிராமங்களில் உள்ள மக்களிடையே தங்கள் பிள்ளைகள் உயர்நிலைப்படிப்பு படிக்க வேண்டுமென்ற விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. நாங்கள் சென்ற வருடமே பள்ளிக்கூடம் ஏற்படுத்துவதற்கு முன்பணம் கட்டி விட்டோம், நீங்கள் அங்கீகாரம் கொடுங்கள் என்று கேட்கிற அளவுக்குக் கிராமத்தில் மக்கள் விழிப்படைந்திருக்கிறார்கள். உங்கள் குழந்தைகளுக்கு உயர்நிலைப்படிப்பு வேண்டாம் என்று சொல்லுவதற்கு நாம் யார்? பள்ளிக்கூடம் வைத்தால் அதற்குத் தேவைப்படும் உபாத்தியாயர்கள் இருக்கிறார்களா, உபகரணங்கள் (equipment) இருக்கிறதா என்று கேட்பது என்ன மனப்பான்மை? உபாத்தியாயர்கள் இல்லாமலா பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்துவோம்? போதுமான பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அப்படி இல்லையென்றால், கனம் அங்கத்தினர் திரு. கிருஷ்ணமூர்த்தி அடிக்கடி வற்புறுத்துவதைப்போல, 55 வயதுக்கு மேற்பட்ட ஆசிரியர்களையும் வைத்துக்கொள்ளுகிறோம். பிள்ளைகளும், பொதுமக்களும், பெரியோர்களும் ஊக்கம் காட்டும் போது, உங்களுக்கு எதற்கு உயர்நிலைப்பள்ளி என்று சொல்லுவதில் அர்த்தமில்லை. இந்த வரவு செலவு அறிக்கையை இந்த மன்றத்தில் சமர்ப்பிக்கும் போது, 195 புதிய உயர்நிலைப்பள்ளிகளை ஆரம்பிக்க இந்த ஆண்டு அங்கீகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிவித்தேன். இப்போது அந்த எண்ணிக்கை 200-க்கு மேல் போய்விட்டது. நான் இந்த எண்ணிக்கை ஏறிவிட்டது என்று சொல்வதனால், கேட்பவர்களுக்கு எல்லாம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம் என்று கருதிவிடவேண்டாம். எவ்வளவோ பேருக்கு இந்த வருடம் அங்கீகாரம் அளிக்க முடியாது, இடமில்லை, கேட்பது நியாயம் இல்லை, சரியாக நடத்த முடியாது, வருகிற வருடம் பார்த்துக்கொள்ளலாம் என்று நிராகரித்திருக்கிறோம்.

அடுத்து, முக்கியமாக கனம் ஆசிரியர்கள் பிரதிநிதிகள் கல்வி விஷயத்தைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். கனம் எதிர்கட்சித் தலைவர்களும் அதைப் பற்றிச் சில கருத்துக்கள் தெரிவித்தார்கள். இந்த விஷயத்தில் எனக்கு மிகச் சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். கல்வி சம்பந்தமான பல பிரச்சனைகள் முடிவு காணப்படாமல் இன்னும் அப்படியே இருக்கின்றன. இந்தப் பிரச்சனைகளைத் தள்ளிப்போட்டுக்கொண்டிருப்பது இளந் தலைமுறைகளின் நலனுக்கு உகந்தது அல்ல. நான் வெளியூர்களுக்குச் சுற்றுப் பயணம் சென்றிருந்தபோது, ஒரு ஊரில் என்னிடம் தெரிவித்தார்கள். ஏழாம் வகுப்புக்கான அரசாங்கத் தமிழ்ப் பாடப் புத்தகம் (Nationalised text-book) மிக உயர் தரமானதாகவும் (high standard) கடினமாகவும் இருப்பதாக என்னிடம் கூறினார்கள். நான் புத்தகத்தை வாங்கிப் பார்த்தேன். ஏழாம் வகுப்புக்கு அந்தப் புத்தகம் சற்று உயர்தரமாக இருப்பதாகவே எனக்கும்பட்டது. ஆங்கிலப் பாடப் புத்தகம் அவ்வளவு கடினமானதாக இல்லை. எங்கள் வீட்டுக் குழந்தைகளே ஆங்கிலப்

7th July 1962] [திரு. எம் பக்தவத்சலம்]

பாடம் குழந்தைகளே ஆங்கிலப் பாடம் ஒன்றும் கடினமாக இல்லே, சுலபமாகத்தான் இருக்கிறது என்ருர்கள். தமிழ் பாட புத்தகம் கீழ்தரமாக (low standard) இருந்தால் பிள்ளைகளின் தரமும் குறையும். ஆகவே சற்று உயர்தரமாக இருந்தால், அதற்கு ஒரு நோட்ஸ் போடுகிற நிலைமை ஏற்படுகிறது.

**வித்வான் டி. முத்துக்கண்ணப்பன் :** தலைவரவர்களே, ஏழாம் வகுப்பு தமிழ்ப்பாடப்புத்தகத்திற்கு notes போட்டாகிவிட்டது என்று தெரியப்படுத்த விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இந்த நிலைமை எப்படி ஏற்பட்டது என்று பார்த்தால், சென்ற வருடம் மொத்தம் 11 வகுப்புகளாக இருந்ததை, 10 வகுப்புகளாக ஆக்கியிருக்கிருர்கள். கனம் அங்கத்தினர்களுக்கு இருக்கிற ஒரு நல்வாய்ப்பு என்ன வென்ருல், அரசாங்கத்தின் எல்லா நடவடிக்கைகளும் உடனுக் குடன் அவர்களுக்குத்தெரிய வசதி இருக்கிறது. எங்களுக்கு அவரவர்கள் இலாக்கா சம்பந்தப்பட்ட விஷயங்கள்தான் தெரியும். ஆகவே எனக்கு இப்படி 11 வகுப்புகளாக இருந்ததை 10 வகுப்பு களாகக் குறைத்திருப்பது முன்னதாகத் தெரியாது.

**திரு. டி. பி. சீனிவாசவரதன் :** தலைவரவர்களே, 11 வகுப்புகளை 10 வகுப்புகளாக ஆக்கியதால் ஏற்பட்டதல்ல இந்த நிலைமை. 1948-ல் தமிழ் First language ஆக்கப்பட்டவுடன், முதல் பாரத் திற்கு அயோத்தியா காண்டத்திலிருந்து 10 பாட்டுகள், திருக்குறள் 10, இரண்டாவது பாரத்திற்கு பாலகாண்டத் திலிருந்து 20 பாட்டுகள், குறளில் 20 என்று திரு. அவனுசிலிங்கம் அவர்கள் ஏற்படுத்தினுர்கள். கம்பரும், திருவள்ளுவரும் 5-வது வகுப்புக்கு இத்தனைபாட்டுகள், முதல் பாரத்துக்கு இத்தனை பாட்டுக்கள் என்று பாகுபடுத்தி எழுதவில்லை. என்றைக்குத் தமிழ் First language என்று வந்ததோ அன்றிலிருந்து இப்படி இருக்கிறது. ஒரு வேளை அமைச்சரவர்களுக்கு இது தெரியாது போலிருக்கிறது.

**கனம் திரு. எம் பக்தவத்சலம் :** அது வேறு விஷயம். 11 வகுப்புகளை 10 வகுப்புகளாகக் குறைத்ததால் Curriculum—condense செய்யவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு வகுப்பிலும் தரத்தை உயர்த்த வேண்டியிருக்கிறது. அது ஒன்று.

மற்ருென்று, கனம் அங்கத்தினர் திரு. சிதம்பரநாதன் அவர்கள் ஏன் Higher Secondary Standard -ஐ அதாவது மேல் உயர்நிலை வகுப்பைக்கொண்டுவரவில்லை, அதற்கு மத்திய சர்க்கார் பணம் ஒதுக்கி வைத்தார்களே, அதை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளவில்லையே என்று எழுப்பிய பிரச்சனையாகும். அரசாங்கம் ஹையர் செகன்டரி வகுப்பை ஏற்படுத்த முதலில் முடிவு செய்திருந்தபோதிலும், திரும்பப் பரிசீலனை செய்ததில் அதில் கஷ்டம் இருப்பது தெரிந்தது. பல உயர்நிலைப்பள்ளிகளில் equipment கிடையாது, ஆகவே இந்த ஆண்டிலேயே Higher Secondary Standard -ஐ அமுல் நடத்துவதில் கஷ்டம் இருக்கிறது

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

என்று தெரிந்தது. அப்படித் தெரிந்த பிறகும், ஏற்கனவே Higher Secondary Standard ஏற்படுத்துவதாக ஒத்துக்கொண்டிருக்கிற படியால், அமுல் நடத்தியே தீரவேண்டும் என்று முடிவு கட்டுவது சரியல்ல, மத்திய சர்க்கார் பணம் கொடுக்கிறார்கள் என்பதற்காக அமுல் நடத்துவது சரியல்ல என்று தோன்றியபடியால் அது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

கனம் எதிர்கட்சிக் தலைவரவர்கள் கல்விச் சீர்திருத்தத்தைப் பற்றிய சர்க்கார் அறிக்கை பத்திரிகைகளில் வெளிவந்ததைப் பற்றிக் குறிப்பிட்டு, அந்த அறிக்கை எப்படி வந்தது என்று கேட்டார்கள். கல்விச் சீர்திருத்தம் சம்பந்தமாக அறிக்கையில் வெளிவந்த யோசனைகள் முன்னமேயே முடிவு செய்யப்பட்டவை தான். எனக்கு அதில் ஈடுபாடில்லை. அந்த அறிக்கை முடிவுகளைப் பிரதிபலிப்பதாகக் கருதக்கூடாது. It is an open matter. முன்னால் முடிவு செய்ததை வெளியே தெரிவித்திருக்கிறார்கள், மற்றவர்கள் அதன் பேரில் தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லட்டும் என்பதற்காக. அது தான் Central Board of Education க்கு அனுப்பப்பட்டது. Central Board of Education -க்கு அனுப்பியது பத்திரிகையில் வெளி வந்திருக்கிறது. நான் இன்னும் அந்த விஷயத்தில் என்னுடைய கவனத்தைச் செலுத்தவில்லை. இது தவிர கல்லூரிப் படிப்புப் பிரச்சனை வேறு இருக்கிறது.

Pre-University வகுப்பு வெற்றியடைந்திருப்பதாகவும், அதில் ஒன்றும் தவறுதல்கள் இல்லை என்றும் கனம் எதிர்க்கட்சித் தலைவரவர்கள் குறிப்பிட்டார்கள். எனினும் வேறு பல கல்வி நிபுணர்கள், கல்வித்துறையில் தொண்டாற்றுகிறவர்கள் Pre-University வகுப்பு வெற்றியடையவில்லை என்று கருதுகிறார்கள்.
4-00 p.m. சில நாட்களுக்கு முன்பு நான் Christian College க்குப் போயிருந்தேன். அந்தக் கல்லூரி முதல்வரைக் கேட்டபோது, 100-க்கு 50 பேர்தான் P.U.C. -ல் தேர்வு பெற்றிருப்பதாகத் தெரிவித்தார்கள். இந்த விஷயத்தில் கல்வி நிபுணர்கள் தங்கள் கருத்தைத் தெரிவிப்பார்கள் என்று கருதுகிறேன். நான் இந்தக் கல்வி சம்பந்தமான பிரச்சனைகளில் closed mind உடையவனாக இல்லை. கனம் அங்கத்தினர் திரு. ராஜா ஐயர் குறிப்பிட்டது போல, closed mind ஆக இல்லாமல், திறந்த மனதுடனேயே இருக்கிறேன். எல்லோரையும் கேட்டறிந்து கல்வித்துறையில் எல்லா விஷயங்களிலும் நிலையற்ற தன்மை (Indefiniteness) நீடித்துக்கொண்டிருக்காமல், சீக்கிரமே முடிவு காணப்பட வேண்டும்; பிள்ளைகளின் படிப்பை நிலையற்ற தன்மையில் வைத்துக் கொண்டிருக்கக்கூடாது என்பது என்னுடைய அவா. ஆகையால் பிரி-யுனிவர்சிடி வகுப்பை என்ன செய்வது என்று இருக்கிறது. அதையெல்லாம் கலந்து பேசி செய்யவேண்டும். அதற்குப் பிறகு மீடியம் ஆஃப் இன்ஸ்ட்ரக்ஷன் இருக்கிறது. செகண்டரி எஜுகேஷனைப் பொறுத்த வரையில் மீடியம் தமிழாக இருக்கிறது. தமிழ் என்றிருந்தாலும் சிறுபான்மையோர் மொழியும் இருக்கிறது. அவர்களுக்கும் வசதியளிக்க வேண்டியவர்களாய் இருக்

**7th July 1962]** [திரு. எம். பக்தவத்சலம்]

கிறோம். தமிழ் மீடியம் உயர்நிலைப்பள்ளிக்கு வந்து 15 வருஷம் ஆகிறது என்று நினைக்கிறேன். அப்போதிருந்து ஆங்கில மீடியம் எடுக்கப்படவில்லை. அதில் தமிழர் அல்லாத குழந்தைகள் மட்டும் படிக்கவில்லை. தமிழ் குழந்தைகளும் அதில் படித்துக்கொண்டு வருகிறார்கள். சென்னையில் உள்ள உத்தியோகஸ்தர்கள்கூட ஆங்கிலம் மீடியம் உள்ள பள்ளிகளுக்குத் தங்கள் குழந்தைகளை அனுப்பி வருகிறார்கள். பதினைந்து வருஷங்களுக்குப் பிறகும் ஆங்கில மீடியம்தான் வசீகரிக்கக்கூடியதாக இருக்கிறது. மதுரையில் ஒரு ஆங்கில மீடியம் உள்ள பள்ளியில் ஒவ்வொரு வகுப்பிற்கும் ஏழு செக்ஷன்கள் இருக்கின்றன. மத்திய அரசாங்க ஆபீசர்கள் இருக்கட்டும்; இந்த மாநில அரசாங்க ஆபிசர்கள் வேறு இடங்களுக்கு மாற்றம் ஆனால், தஞ்சாவூர், போன்ற இடங்களுக்குப் போனால், அங்கு ஆங்கிலம் மீடியம் உள்ள பள்ளிகள் இல்லாமல் இருந்தால் என்ன செய்வது? அவர்களுக்குக் கஷ்டம்தானே? அந்த மாதிரிக் கஷ்டங்கள் எல்லாம் இருக்கக்கூடாது என்பது சர்க்கார் விருப்பம். இபோது ஆங்கில மீடியம் பல பள்ளிகளில் இருக்கிறது. சென்ற ஆண்டில் 25 பள்ளிகளுக்கு ஆங்கில மீடியத்திற்கு அனுமதி கொடுத்திருக்கிறார்கள். அதனால் நான் தமிழுக்கு விரோதி என்று சிலர் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அது ஒரு 'பேஷன்'. கல்லூரி மீடியம் தமிழாக இருக்கவேண்டுமென்று பரிட்சார்த்தமாக இப்போது நான்கு கல்லூரிகளில் வைத்து நடந்துவருகிறது. இனிமேல்தான் எப்படி நடக்கிறது என்று பார்க்கவேண்டும். ஏதோ பத்திரிகையில் அறிக்கை வந்தது. நான் பார்க்கவில்லை. சில விஷயங்கள் பத்திரிகையில் பார்த்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அதற்குப் பிறகுதான் நமக்குத் தெரிகிறது. எவால்யூவேஷன் கமிட்டி இதைப் பார்த்து ரொம்ப நன்றாக இருக்கிறது என்று சொல்லியிருப்பதாகப் பத்திரிகையில் வந்திருந்தது. எனக்கு வந்த தகவலில் அப்படியில்லை. கோயம்புத்தூரில் நான்கு கல்லூரிகளில் தமிழ் மீடியமாக வைத்திருக்கிறது. அந்தப் பிள்ளைகளுக்கு மாதம் ரூ. 30 இனாமாகக் கொடுக்கிறோம். தமிழ் படிக்கக் கொடுக்கிறோம். அதாவது சின்னக் குழந்தைகளுக்கு மருந்து கொடுக்கும்போது மிட்டாய் கொடுப்பதுபோல. முழுச் சம்பளச் சலுகை அளித்திருக்கிறோம். இவ்வளவு செய்தும் இந்த வருஷத்துக்கு கோயம்புத்தூர் கவர்ன்மெண்ட் ஆர்ட்ஸ் காலேஜில் 1962-63-ல் சரித்திர வகுப்புக்கு 3 பிள்ளைகள்தான் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு வகுப்பு நடக்கிறது. பாலிடிக்ஸ் 2, எகனாமிக்ஸ் 5, ஜியாகரஃபிக்கு 2, சைகாலஜிக்கு 2. பி. எஸ். ஜி. ஆர்ட்ஸ் காலேஜ், கோயம்புத்தூரில் எகனாமிக்ஸ் 9, சோஷியல் சயன்ஸ் 3. இவ்வளவு சலுகைகள் கொடுத்தும் பிள்ளைகள் இவ்வளவுதான் வருகிறார்கள். கோயம்புத்தூர் நல்ல ஸ்தலம். நல்ல டவுன். அடுத்தபடியாக, பொள்ளாச்சி கவர்ன்மெண்ட் காலேஜிலும் 1962-63 க்கு 12 பேர்கள்தான் வந்திருக்கிறார்கள். அவினாசிலிங்கம் செட்டியார் ஹோம் சையன்ஸ் காலேஜிலும் 11 பேர் தான் இருக்கிறார்கள்.

**திரு. க. அன்பழகன் :** இப்போது அவற்றைப் படிக்கிறவர்கள் குறைவு. விஞ்ஞானம் படிக்கிறவர்கள்தான் அதிகம்.

[7th July 1962

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** விஞ்ஞானம் படிக்கிறவர்களுக்கு வேண்டிய தமிழ் நூல்கள் உடனடியாகக் கிடைக்க வழி செய்வதற்கில்லை. நான் இது சம்பந்தப்பட நிபுணர்கள், மற்றும் அனுபவம் உள்ளவர்கள், கலாசாலைகளில் உள்ளவர்கள் இவர்களிடத்தில் கேட்டு, கலந்து பேசி ஒரு அபிப்பிராயத்தைத் திரட்டி, அதற்குப் பிறகு அரசாங்கம் முடிவுக்கு வந்து அதற்குப் பிறகு—சட்டமன்ற ஆலோசனைக் குழு ஒன்றிருக்கிறது—அவர்களைக் கலந்து சட்ட மன்றத்தில் வைத்து நடத்தவேண்டும். இப்போது இந்த அக்கடாமிக் ஆண்டு முடிவதற்குள்ளாக இதற்கு முடிவு காணவேண்டுமென்பது என் அவா.

கனம் எதிர்க்கட்சி தலைவர் அவர்கள் மத்திய அரசாங்கக் கல்வி அமைச்சர் சில கருத்துக்களைத் தெரிவித்திருப்பதைப்பற்றிச் சொன்னார்கள். அவர்கள் சொல்வதை நான் பொதுவாக ஏற்றுக் கொள்கிறேன். கல்வியைப் பொறுத்தமட்டில் மாநிலத்திற்கு முதல் இடம் கொடுக்கப்படவேண்டும். மத்திய அரசாங்கம் நம்மைக் கலக்காமல் இந்த மாதிரி உத்தரவு போட்டுவிட்டோம் என்று சொல்வது சரியல்ல. நாம் அதை ஏற்றுக்கொள்ள முடியாது. மற்றொன்று சொல்ல விரும்புகிறேன். கிராமங்களில் இருக்கிறவர்களுக்கு ஒரு கருத்து இருப்பதை நான் பார்க்கிறேன். கிராமத்தில் உள்ளவர்கள் சதாரண விவசாயிகள், இதில்கூட ஜாதி வேற்றுமை இருக்கிறதாக நினைக்கிறார்கள். ஆங்கிலம் படிக்கிறவர்கள் உயர்ந்த ஜாதி என்றும் அது அவர்களுக்கு வேண்டியதில்லை என்றும் நாம் நினைப்பதாகவும் அவர்கள் கருதுகிறார்கள். தமிழ்தான் படிக்க வேண்டுமென்று சொல்வது அவர்களை முன்னேற்ற வேண்டாமென்று சொல்வதாக அவர்கள் நினைக்கிறார்கள். அகில இந்தியாவின் ஒருமைப்பாடு இருக்கிற காரணத்தால் ஒவ்வொருவரும் ஒரு யுனிவர்சிடியிலிருந்து வேறு யுனிவர்சிடிக்குப் போக வேண்டும், அந்நிய நாட்டுக்குப் போக வேண்டும் என்று ஆசையுடன் படிக்கிறார்கள். போகிறார்களோ இல்லையோ அது வேறு கேள்வி. எல்லோருக்கும் படிக்கும்போது வெளிநாடுகளுக்கும் போகவேண்டுமென்ற ஆசை இருப்பது இயற்கை. நியாயமும் கூட. அதற்கெல்லாம் இடமில்லாமல் தமிழையே போதனை மொழியாக வைத்து நம்மை கெடுக்கிறார்களே என்ற கவலை அவர்கள் மனதில் இருப்பதாக நான் நினைக்கிறேன்.

**திரு. டி. பி. சீனிவாச வரதன்:** பேசிக் எஜுகேஷனைப்பற்றி கிராமத்தில் அப்படி நினைக்கிறார்கள். "எங்களுக்குமட்டும் அது கற்றுக்கொடுப்பதாகச் சொல்லி தாழ்ந்த நிலையில் வைத்திருக்கிறார்கள். பட்டணத்தில் பேசிக் எஜுகேஷன் இல்லை", என்று கருதுகிறார்கள் ஒரு தலைப்பட்சமான கல்வி கொடுப்பதாக அபிப்பிராயம் இருக்கிறது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** பேசிக் எஜுகேஷன் நன்றாக யோசித்து முடிவு செய்யவேண்டிய விஷயம். ஆங்கிலம் வேண்டாமென்று சொல்கிற விஷயத்தில் இந்த அபிப்பிராயம் இருக்கிறது. யுனிவர்சிடியில் மேலும் படிக்கவேண்டுமென்று இருக்கிறது. நாடு

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

ஒருமைப்பாட்டில் ஒருவருக்கொருவர் பழகுவதற்கு பொது மொழி ஒன்று வேண்டியிருக்கிறது. அதற்கு அவர்கள் இந்தி என்று சொல்கிறார்கள். நாம் அதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று சொல்கிறோம். வேறு எதை ஏற்றுக்கொள்வது ? இந்தியைத் தவிர அதோடுகூட வேறு ஒரு மொழி வேண்டுமென்று சொன்னோம். எதைச் சொல்வது ? தமிழைச் சொல்ல முடியுமா ? அதனால் ஆங்கிலத்தைச் சொன்னோம். அதை அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். ஆங்கிலம் அடியோடு புறக்கணிக்கப்படுவது நாட்டு மக்களுக்கு நல்லதா என்று கவனிக்கவேண்டும். மத்திய அரசாங்கக் கல்வி அமைச்சர் சொல்லியது எனக்குப் புரியவில்லை. அவர்களை வற்புறுத்த முடியாது. மத்திய அரசாங்கம் இதில் எல்லாம் தலையிடுவதற்கு இந்த அரசாங்கம் இடம் கொடுக்கக் கூடாது. ஆனால் இதில் கோ-ஆர்டினேஷன் மட்டும் வேண்டும். சென்ட்ரல் போர்டு ஆஃப் எஜுகேஷன் சொல்வதைக்கேட்கலாம். அவர்கள் சொல்வதையெல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற கருத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. மேலும் ஒன்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். சிலர் நினைக்கின்றார்கள் ஆங்கிலத்தை ஒழித்துவிட்டால் இந்தி வந்துவிடும் என்று அந்த நோக்கத்துடன் சிலர் பிராந்திய மொழி என்று வாதாடுகின்றனர் என்பது ஒரு அபிப்பிராயம்.

ஸ்ரீ ராஜா அய்யர் அவர்கள் பல கருத்துக்களை, ஆசிரியர் நியமனம் பற்றிச் சொன்னார்கள். ஹையர் எலிமெண்டரி ட்ரெயினிங்கை எடுத்துவிட வேண்டுமென்று எனக்கும் கருத்து உண்டு. இதையெல்லாம் அவசரப்பட்டுச் செய்ய முடியாது. ஒவ்வொன்றாகத்தான் செய்ய வேண்டும். கனம் அங்கத்தினர் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஆசிரியர்கள் பிரதிநிதியாக இருந்து ஆசிரியர்களுக்காக வாதாடுபவர்கள் எப்பொழுதும் அவர் காரசாரமாகப் பேசுவார். இந்த முறை பேசியதில் ரொம்பகாரம் இல்லை. எவ்வளவு காரமாக பேசினாலும் ஆசிரியர்களிடத்தில் இருக்கின்ற அன்பின் காரணமாகத்தான் பல காரியங்கள் நடந்திருப்பதற்கும் அதுதான் காரணம்.

புத்தகம் போடுவதைக் குறித்து எதிர்க்கட்சி தலைவர் அவர்கள் சொன்னார்கள். "நேஷனலைசேஷன் ஆஃப் புக்ஸ்" நல்லதல்ல என்று சொன்னார்கள். நான் பெருமையாகச் சொல்லவில்லை. 25 ஆண்டுகளுக்கு முன்பே நான் சொன்னேன். 1937-ம் வருஷம் காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டபிறகு அப்போதிருந்த கல்வி அமைச்சரிடத்தில் நான் சொன்னேன். இந்த மாநிலங்களை மூன்று நான்கு ரீஜன்களாகப் பிரித்து ஒரு நல்ல கமிட்டி போடுங்கள். அது செலக்ட் செய்யட்டும். கெட்ட பெயருக்கு இடம் கொடுக்காமல் ஒரு யூனிபார்மிடி ஏற்படும். ஒரு நல்ல கமிட்டியை அமைத்து, அதில் அரசியல் வாதிகள் இல்லாமல் ஒழுங்காகப் பண்ணக்கூடியவர்களாகப் பார்த்து போடுங்கள் என்று 25 ஆண்டுகளுக்கு முன் சொன்னேன். இப்போது இருக்கிற நிலையில் புத்தகங்கள் போடுவதில் 'நெகட்டிவ்' மனப்பான்மை மாத்திரம் இருந்தால் போதாது.

[திரு. எம் பக்தவத்சலம்] [7th July 1962

அடுத்தது நாட்டை பிரிக்கவேண்டுமென்பது. பிரிவினையை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. பிரிக்கிற மனப்பான்மை ஆசிரியர்களுக்கு இருக்கக்கூடாது. அத்தகைய எண்ணமுள்ளவர்கள் ஆசிரியர்களாக இருப்பதற்கே இடம் இல்லை. அதை நான் கண்டிப்பாகச் சொல்கிறேன். பிரிவினைக் கருத்துக்களை எல்லாம்
4-20 p.m. பிள்ளைகளுக்குப் போதிக்க இடம் கிடையாது. பத்திரிகைக்காரர்கள் ஏதோ மனதில் வைத்துக்கொண்டு ஏதோ எழுதுகிறார்கள். நமக்கு இல்லாத பொறுப்பு டில்லியில் இருக்கிறவர்களுக்கு என்ன இருக்கிறது? இன்று காலை பத்திரிகையில் ஒன்று வந்தது. முதல் அமைச்சருக்குக்கூட கடிதம் வந்தது. பத்திரிகைக்காரர்கள் ஏதோ அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பதுபோல் எழுதுகிறார்கள். நமக்கு ஆட்சேபகரமான புத்தகம் கூடாது. ஏதாவது ஆட்சேபமிருந்தால் அதை நீக்கிவிடுகிறேன். ஆனால் அது மாத்திரம் போதாது. ஆட்சேபகரமாக இல்லாததுடன் கூட positive ஆக—நல்ல கருத்துக்கள் இருக்க வேண்டும். மேனாடுகளில் அத்தகைய கருத்துக்களைக் குழந்தைப் பருவத்தில் புகுத்துகிறார்கள். Select பண்ணினால் போதாது. அதற்கென்று எழுத வேண்டும். Nationalization என்றால், ஏதோ அரசியல் கருத்துடன் செய்வதல்ல. Text-Book Committee இதை approve பண்ணட்டுமே. ஆகையினால் அதையும் பற்றி எனக்கு ஆட்சேபமில்லை. இவ்வாறு புத்தகங்கள் விஷயத்திலும் மேலும் நாம் கவனம் செலுத்தி எவ்வளவோ செய்ய வேண்டியிருக்கிறது. இப்போது புத்தகத்தில் கூட போட்டா போட்டி இல்லை. நாம் எழுதுவதெல்லாம் English தமிழ் language books தான். நாம் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்றோ அல்லது indoctrination வேண்டுமென்றோ இதைச் செய்யவில்லை. நல்ல கருத்துக்களை அளிக்கும் பாடப் புத்தகங்களைச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தை, நாம் மாத்திரமல்ல. அகில இந்தியாவும் மேற்கொண்டிருக்கிறது. இதுதான் மத்திய அரசாங்கத்தின் கொள்கை.

சர்க்கார் உத்யோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படி வழங்கும் விஷயத்தில் மத்திய அரசாங்கம் எப்படிக் கொடுக்கிறார்களோ அப்படிக் கொடுப்பது என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். அப்படிக் கொடுப்பதில் நாம் ரூ. 150க்குக் குறைந்த சம்பளம் உள்ளவர்களுக்குக் கொடுத்திருக்கிறோம். மத்திய சர்க்கார் ரூ. 300, 400 வரை சம்பளம் உள்ளவர்களுக்குக் கூட கொடுத்திருக்கிறார்கள். இங்கேயும் அது ஏன் கொடுக்கவில்லை என்று கேட்கிறார்கள். நமக்கிருக்கும் நிதி நிலையில் அதிகமாக deficit வைத்துக்கொள்ள முடியாது. இதற்குமேலே deficit- ஐ அதிகப்படுத்தப் பிரியப்படவில்லை. சர்க்கார் உத்யோகஸ்தர்களுக்குக் கொடுப்பது போல் ஆசிரியர்களுக்கும், ஸ்தலஸ்தாபன ஊழியர்களுக்கும் கொடுக்க வேண்டும். நமக்கு இரண்டு alternatives இருக்கின்றன. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எல்லோருக்கும் கொடுத்துவிட்டு ஆசிரியர்களைப் பார்த்து 'நீங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள் என்று சொல்வதா அல்லது

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

இருப்பதை எல்லோருக்கும் கொடுத்துவிட்டு ரூ. 150க்கு மேல் இருப்பவர்களைப் பொறுத்துக்கொள்' என்று சொல்வதா? நாங்கள் N.G.Os. ஐ கேட்டோம். 'நீங்கள் யாராவது எங்களுக்கு மட்டும் கொடு என்று கேட்பீர்களா? என்று கேட்டேன். என்ன பதில் சொல்வார்கள்? அந்த முறையில் கொடுத்திருக்கிறோம். இன்னும் ரூ. 80 லட்சம் வேண்டியிருக்கிறது. அவர்கள் (N.G.Os.) புரிந்து கொள்கிறார்கள். எதிர்க்கட்சியினர் கவலைப்பட வேண்டாம். என்.ஜி.ஓ.-வினருக்குப் புரிகிறது, நாங்கள் சொல்வது. இங்கேயுள்ள அங்கத்தினர்களைவிட எங்களுக்கு அதிகக் கவலை இல்லாமல் இல்லை.

திரு. டி. பி. சீனிவாசவரதன்: நீங்கள் சீக்கிரம் கொடுப்பீர்கள் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருக்கிறது.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** வாயளவில் அனுதாபம் பலருக்கு இருக்கலாம். உண்மையான அனுதாபம் எங்களுக்கு இருப்பது அவர்களுக்குத் தெரியும்.

கடைசியாக, வரிகளைப்பற்றி விளக்க விரும்புகிறேன். கனம் எதிர்க் கட்சித் தலைவரவர்கள் சொன்னார்கள்— Three pronged attack என்று. கிராமத்திற்கு பஞ்சாயத்து, மாநில ஆட்சி, மத்திய ஆட்சி வேண்டியிருக்கிறது. மக்களுக்கு மூன்று ஆட்சியும் வேண்டியிருக்கிறது. அதற்கு வருவாயும் தேடவேண்டியிருக்கிறது. நகரத்தில் எதுவுமிருக்கிறது. கிராமத்திற்கும் போகவேண்டும். வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு ஏதாவது கொடுத்துத்தானே ஆகவேண்டும். வரி போடும்போது இது அவசியமா என்று பார்க்க வேண்டும். போடும்போது தாங்கக்கூடியவர்களுக்குத்தான் போடுகிறோமா அல்லது தாங்க இயலாதவர்களுக்குப் போடுகிறோமா என்று பார்க்க வேண்டியது. இன்றைக்குப் போட்ட வரி தாங்கக்கூடியவர்களுக்குத்தான் போட்டிருக்கிறோம். எந்த வரியைப் போட்டாலும் "ஏழை எளியவர்களுக்குத்தான் போடுகிறோம்— The most exploited man is the common man" என்கிறார்கள். அந்த common man வரி கொடுக்கமாட்டான். அவன் எங்கேயிருந்து எதற்காக வரி கொடுக்கிறான்? ஆனால் அந்த common man -க்குத்தான் அனுதாபம் இருக்கிறது. தாங்கக்கூடியவர்களுக்குத்தான் போடுகிறோம்.

நிலவரியை எடுத்துக் கொள்ளுங்கள். 1938-39-ல் தான் நாம் ஆட்சியை மேற்கொண்டோம்—அப்போது சென்னை ராஜதானி என்று இருந்தது—ஆந்திரா, கேரளம், தென் கன்னடம், தமிழ்நாடு எல்லாம் சேர்ந்து அப்போது மொத்த வருமானம் ரூ. 16 கோடி 13 லட்சம். அப்போது ராஜாஜி முதலமைச்சராக இருந்தார். அதில் நிலவரி including irrigation cess ரூபாய் 7 கோடி. நிலவரி விகிதாசாரம் என்ன? Land Revenue 43.75 per cent of the total revenue அதற்குப் பிறகு 1952-53ல் பார்த்தால் வருமானம் ஏறி இருந்தது. ரூ. 63 கோடி 35 லட்சத்துக்குக் ஏறியது. அப்போது நிலவரி 7 கோடி

*[திரு. எம். பக்தவத்சலம்]* [7th July 1962

*யிலிருந்து ரூ. 10 கோடி 9 லட்சமாக ஏறியது. அப்போது* **Land Revenue 15.9 per cent of the total revenue** *இப்போது நமது மொத்த வருமானம் ரூ. 106 கோடி. இதில் நிலவரி, தண்ணீர் வரி, ஸ்தல ஸ்தாபன சர்சார்ஜ் எல்லாம் சேர்த்துப் பார்த்தாலும் கூட—மத்திய அரசாங்கம் நேரிடையாக வரி போடுவதில்லை—மற்றபடி பஞ்சாயத்து போடுவது, அயன் நிலவரி எல்லாம் சேர்த்துப் பார்த்தாலும் ரூ. 9 கோடி 26 லட்சம். ரூ. 106 கோடியில் ரூ. 9 கோடி 26 லட்சம்* **That works out to**
4-30 p.m **6.4 per cent of the total revenue. From 43.75 per cent in 1938-49 and 15.9 per cent in 1952-53, it now comes to 6.4 per cent.** *நிலவரி ஏறவில்லை. அப்படியே இருக்கிறது என்று சொல்கிறேன். இந்த நிலையில் நிலம் கொஞ்சம் உள்ளவர்களாக இருந்தாலும் 63 லட்சம் தானாகிறது. அநேகமாக சோஷலிஸத்தை யாருமே பகிரங்கமாக எதிர்க்க மாட்டார்கள். நிலம் இல்லாதவர்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள்.*

*சில இடங்களில். லோயர் பவானி, அமராவதி, கிருஷ்ணகிரி* **Reservoir** *திட்டத்தில் பார்த்தால் நிலத்தீர்வை மாத்திரம் ஏக்கருக்கு 15 முதல் 20 ரூபாய். தஞ்சாவூரில் சில இடங்களில் 3½ ரூபாய் இருக்கிறது. பெரியாறு* **irrigation** *ல் 5 ரூபாய் இருக்கிறது. ஒரு* **equity** *வேண்டாமா? இவ்வளவு வருமானம் பெருகிக்கொண்டு போகும்போது, நிலவரியைத் தொடக்கூடாது என்றால் என்ன அர்த்தம்? இப்போது எவ்வளவு வசதி கொடுக்கிறோம். அவர்களுக்கும் உற்பத்தி பெருகி வருகிறது.* **Prize competition** *பற்றிச் சொன்னார்கள். ஆனால் சராசரியில் உற்பத்தி பெருகி வருகிறதா இல்லையா? விலை அதிகமாகி வருகிறது. முன் மாதிரி கடன் பளு இல்லை. 1938-39-லிருந்து போடப்பட்டிருக்கிறது. நிலவரி தண்ணீர் தீர்வையோடு இணைக்கப்பட்டிருக்கிறது. இப்போது நாங்கள் தண்ணீர்த் தீர்வையை இரட்டிக்க விரும்புவதால், முதல் இரண்டாம்தர பாசன ஆதாரங்களின்கீழ் நஞ்சை என்று பதிவு செய்யப்பட்ட நிலங்களின் மீது 60 சத வீதமும், அதே மாதிரி முதல், இரண்டாம் தர பாசன ஆதாரங்களின் கீழ் உள்ள புஞ்சை நிலங்களின் மீது 100 சத வீதமும் உயர்த்துகிறோம். ஏற்கனவே பல இடங்களில் நிலத் தீர்வை அதிகமாகக் கொடுத்து வருகிறார்கள். திருநெல்வேலியில் ஒரு போக நஞ்செய் சாகுபடிக்கு* **(single wet crop cultivation)** *ஏக்கருக்கு ரூ. 16 வீதம் கொடுக்கிறார்கள். இந்த 16 ரூபாய் தீர்வையை 32 ரூபாய் ஆக்க வேண்டுமென்றோ, அல்லது 60 சத வீதம் உயர்த்துவது என்றால், ரூ. 26 ஆக்க வேண்டுமென்றோ அரசாங்கம் விரும்பவில்லை. இன்னும் அதே திருநெல்வேலியில் இருபோக நஞ்செய்ச் சாகுபடிக்கு* **(double wet crop cultivation)** *ஏக்கருக்கு ரூ. 24 வரை தீர்வை கொடுக்கிறார்கள். இதை 48 ரூபாய் ஆக்க வேண்டுமென்பதல்ல எங்கள் நோக்கம். எந்த நஞ்செய்ச் சாகுபடியாக இருந்தாலும் இந்தத் தீர்வை ஒரு போகத்துக்கு* **(Single crop)** *ஏக்கருக்கு ரூ. 20க்கு மேலும், இருபோகத்துக்கு* **(Double crop)** *ஏக்கருக்கு ரூ. 30க்கு மேலும் போகாமல் உச்ச வரம்பு* **(Ceiling)** *போடுவதாக இருக்கிறோம். அது சட்டத்தில் வந்து விடும்.*

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

அதேமாதிரி புஞ்செய் நிலத்துக்குத் தண்ணீர்த் தீர்வை **C.M.P.** பகுதியில், தஞ்சை-மேட்டூர் கால்வாய் பகுதியில் ஏக்கருக்கு 10 ரூபாய் போடுகிறோம். அந்தத் தீர்வையை 100 சத விகிதம் உயர்த்தி ரூ. 10-ஐ ரூ. 20 ஆக்க உத்தேசமில். **C.M.P.** பகுதியில் ஏக்கருக்கு 15 ரூபாய்க்கு மேல் தீர்வை இருக்கக்கூடாது என்ற உச்ச வரம்பு போடுவதாக இருக்கிறோம். அப்படி ஏற்படுத்தி விட்டால், சராசரி உயர்வு ஒரு ஏக்கருக்கு 5 ரூபாய்க்கு மேல் இருக்காது. ஆகவே இந்தத் தீர்வை ஒன்றும் அதிகமல்ல என்பதைக் கனம் அங்கத்தினர்கள் ஒப்புக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

பஸ் வரியை எடுத்துக்கொண்டால், நாங்கள் கணக்கிட்டுப் பார்த்து, உத்தேசிக்கப்பட்டுள்ள கூடுதல் வரியை பஸ் சொந்தக் காரர்கள் தாங்க முடியும் என்ற அபிப்பிராயம் ஏற்பட்ட பிறகு தான், அந்த வரி விதிப்பை நிர்ணயம் செய்திருக்கிறோம். ஆனால் இங்கு சபையில் பேசியவர்கள் போக்கு அந்த வரி உயர்வு, ஏழை எளிய பிரயாணிகள் மீது போய்விடும் என்ற பீதியைக் கிளப்பி, பஸ் கட்டணத்தை ஏற்ற வேண்டாம் என்று இருக்கிற முதலாளி களை, நீங்கள் கட்டணத்தை ஏற்றுங்கள் என்று சொல்லுவது போல் இருக்கிறது. **Passenger fare**-க்கு பிரயாணக் கட்டணத்துக்கு, வரம்பு சட்டத்தில் இருக்கிறது. அந்தச் சட்டப் பிரிவை நாம் கையில் வைத்துக் கொண்டிருக்கிறோம். அதை சர்க்கார் மாற்றுவதாக இல்லை. சர்க்கார் பஸ்களிலும் கட்டணத்தை உயர்த்துவதாக இல்லை என்று கனம் அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் தெரிவித்திருக்கிறார். பஸ் வரி, சில மாநிலங்களில் வேறு முறைப்படி போடுகிறார்கள். ஒரே சீராக **(Uniform) seat**-க்கு 67½ ரூபாய் என்று போட்டிருக் கிறார்கள். நாங்கள் போட்டிருப்பது மிகவும் குறைவு. இந்த வரி உயர்வுக்கான மசோதா சட்டமன்றத்தில் வருகிறபோது, பஸ் சொந்தக்காரர்களுக்கு ஏதாவது கஷ்டமிருந்து, குறிப்பிட்ட யோசனைகளைச் சொன்னால், அதை நாங்கள் பரிசீலனை செய்வோம்.

அதேமாதிரி லாரியின் மேல் போட உத்தேசிக்கப்பட்டுள்ள கூடுதல் வரியால், லாரியின் மூலம் கொண்டு வரப்படுகிற சரக்கு களின் விலை ஏறிவிடும் என்று சொல்லுவது சரியல்ல. கூடுதல் வரியைப் போடவேண்டாம் என்று நிறுத்திவிடுகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள்; அப்போது லாரி சொந்தக்காரர்கள் லாரி வாடகையை உயர்த்துகிறார்கள் என்றால் யார் என்ன செய்ய முடியும்? அப்போது விலை ஏறாதா? சிறிய லாரி சொந்தக் காரர்கள் அதிகம் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கஷ்டம் ஏற்படக் கூடாது என்பதையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொண்டு, சிந்தித்த பிறகுதான் இந்தக் கூடுதல் வரியைப் போட லாம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். உண்மையிலேயே லாரிச் சொந்தக்காரர்களுக்கு ஏதாவது கஷ்டமிருந்தால், இந்தக் கூடுதல் வரி விதிப்பிற்கான சட்டம் சபையில் கொண்டு வரப்படும்போது, அதற்கு என்ன பரிகாரம் செய்யலாம், மாறுதல் செய்யலாம் என்று யோசிக்கலாம். ஆனால் ஒன்று சொல்ல விரும்புகிறேன். நம்முடைய

மாநிலத்தில்தான் நல்ல ரோடுகள் இருக்கின்றன. அதனால் பஸ், லாரிகளுக்குப் பெருத்த அனுகூலம். Wear and tear மிகக் குறைவு.

மின்சார வரியை எடுத்துக் கொண்டால், விவசாயத்துக்குக் கொடுக்கப்படும் மின்சாரத்துக்கு, பம்பு செட்டு வைத்திருக்கிற விவசாயிகளுக்கு யூனிட்டுக்கு 7 ந. பை. தான் கட்டணம். தேசம் பூராவிலும் எடுத்துக் கொண்டு பார்ப்போமேயானால், நம்முடைய மாநிலத்தில்தான் கட்டணம் மிகவும் மலிவானதாக இருக்கிறது. மற்ற மாநிலங்களில் மின்சாரக் கட்டணம் விவசாயத்துக்கு, யூனிட்டுக்கு 9 ந. பை. யிலிருந்து 15 ந. பை. வரை இருக்கிறது. யூனிட்டுக்கு 9 ந. பை. வரை விதிக்கலாம், அதுதான் நியாயமாக இருக்கும். அதற்கு மேல் போகக் கூடாது என்று மத்திய அரசாங்கம், Planning Commission சொன்னார்கள். நாம் 9 ந. பை. கூட போடவில்லை. 7 ந. பை. தான் போட்டிருக்கிறோம். மற்ற மாநிலங்களில் மின்சாரம் கிராமங்களுக்கு அதிகமாக விஸ்தரிக்கப்படவில்லை. நம்முடைய மாநிலத்தில் தான் கிராமங்களுக்கு மின்சாரம் அதிகமாக விஸ்தரிக்கப்பட்டு, அதிகமான விவசாயிகளுக்கு பம்பு செட்டுகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. எங்கே மின்சாரம் உற்பத்தி ஆகிறதோ, அங்கிருந்துகூட கொடுத்துக்கொண்டு வருகிறோம். இதனால் லாபம்கூட இல்லாமல், subsidise செய்து கொடுக்கிறோம். இப்போது உத்தேசிக்கப்பட்டுள்ள மின்சார வரி அதிகரிப்பால், கட்டணம் 7¾ ந. பை. தான் ஆகும். அதோடு, முக்கியமாக விவசாயிகளுக்கு minimum charge தொந்திரவாக இருக்கிறது என்று பலர் கருத்துத் தெரிவித்தார்கள். மின்சாரம் கேட்கிறபோது, விவசாயிகள் எவ்வளவு வேண்டுமானாலும் மின்சாரம் எடுத்துக் கொள்கிறோம் என்கிறார்கள். பின்னால் மின்சாரத்தை அந்த அளவுக்குப் பயன் படுத்த முடியாமல், minimum charge கட்டுவது நஷ்டத்தை ஏற்படுத்துகிறது என்கிறார்கள். அரசாங்கம் இதை யோசித்துக் கொண்டிருக்கிறது. minimum charge தொல்லையாக இருந்தால், எடுத்துவிட முடிவு செய்வோம். விவசாயிகளைப் பொறுத்த வரையில், மின்சாரக் கட்டணத்தை 100-க்கு 10 வீதம் அதிகப் படுத்துவது அவர்களுக்கு ஒரு சுமையாகாது. ஏனென்றால் ஒரு ஏக்கர், இரண்டு ஏக்கர் வைத்திருப்பவர்கள் பம்பு செட்டு வைத்துக் கொண்டிருக்கமாட்டார்கள். பம்பு செட்டு வைத்துக் கொண்டு மூன்று போகம் சாகுபடி செய்கிறவர்களுக்கு நிறைய விளைச்சல் ஏற்படுகிறது. அவர்களுக்கு 10 சத விகித உயர்வு ஒரு சுமையாகாது. ஆகையினால் 10 சத விகிதம் உயர்த்துவதில் தவறில்லை.

வீட்டு உபயோகத்துக்கு இப்போது யூனிட்டுக்கு 29 ந. பை. கட்டணம் வசூலிக்கப்படுகிறது. இப்போது உத்தேசிக்கப் பட்டுள்ள 10 சத வீத அதிகரிப்பால், 3 ந. பை. அதிகம் ஆகிறது யூனிட்டுக்கு. சாதாரணமாக சராசரி ஒரு வீட்டுக்கு 20 யூனிட்டு மின்சாரம் செலவாகும். 20 யூனிட்டுக்கு 29 ந. பை. வீதம் கட்டுகிறவர்கள், இன்னும் ஒரு 10 அணு சேர்த்துக் கட்ட முடியாதா?

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

ஆகையினால் அவர்களுக்கும் இந்த மின்சார வரி உயர்வு ஒன்றும் பெரிதல்ல. மின்சார வசதியுள்ள வீடுகளில் இருக்கிற தொழிலாளிகளும் இந்த 10 அணு அதிகமாகக் கொடுக்கத் தயங்க மாட்டார்கள். ஏனென்றால், நான் பார்த்திருக்கிறேன், சில சமயங்களில் அவர்கள் இரண்டு யூனியன்களுக்கு சந்தா கொடுக்கக் கூடத் தயங்குவதில்லை. Low Tension-ல் உள்ள சிறிய தொழில்களுக்கு இந்த உயர்வால், அதிகமாக வரி உயராது. High Tension -ல் இருப்பவர்கள் அதிகமாக மின்சாரம் எடுக்கிறவர்கள். அவர்கள் Fuel Surcharge வேறு கட்டவேண்டியிருப்பதால், அவர்களுக்கு அடிப்படைக் கட்டணத்தின் பேரில் 5 சத வீதம் வரி விதிக்க முடிவு செய்திருக்கிறோம். இதனால் எந்தத் தொழிலிலும் உற்பத்திச் செலவு 1 சத வீதத்திற்கு மேல் போகாது, போகக் கூடாது என்று வைத்திருக்கிறோம். 4-40 p.m.

கரும்புக்கு வரி போடுவதைப் பற்றிப் பேசினார்கள். அது பாக்டரிகள் கொடுப்பது. கரும்பு உற்பத்தியாளர்கள் அல்ல. கரும்பு விலை நிர்ணயிப்பதுபற்றி பத்திரிகையில் பார்த்திருக்கலாம். பாக்டரிகளுக்குக் கொடுத்திருக்கிறது. முன்னே 2 ரூபாய் இப்போது 5 ரூபாய் ஆகிறது. மற்ற மாநிலங்களில் ரூ. 5, 6 என்று இருக்கிறது. அவற்றை ஜெனரல் ரெவின்யூவில் சேர்க்கிறார்கள். அப்படிச் சேர்க்க எங்களுக்கு உத்தேசமில்லை. கரும்பு, சர்க்கரை உற்பத்தியாகிற பிரதேசங்களில் ரோடு அபிவிருத்தி, ஆராய்ச்சி அபிவிருத்திகளுக்காகவே செலவு செய்யப்போவதாக வைத்திருக்கிறோம். அவர்களிடமிருந்து வசூலிப்பதைத் திரும்ப அவர்களிடத்திலேயே செலவு செய்யப்போகிறோம். புதிதாக பாக்டரி போட்டவர்களுக்குக் கஷ்டமாக இருக்குமென்று சொன்னார்கள். அவர்களுக்கு முதல் மூன்று வருஷங்களுக்கு இரண்டிலிருந்து ஐந்து ஆக்குவதைக் கொஞ்சம் நிறுத்திக்கொள்ளலாமா என்ற யோசனை அரசாங்கத்திற்கு இருக்கிறது.

ஸ்டாம்பு டியூட்டி பற்றிச் சொன்னார்கள். ஸ்டாம்புகளில் ஏமாற்றுகிறவர்கள் இல்லாமல் இல்லை. பத்தாயிரத்திற்கு விலை பேசிக்கொண்டு இரண்டாயிரத்திற்கு எழுதுகிறவர்கள் உண்டு. அரசாங்கம் அதைத் தவிர்க்க கவனம் செலுத்திக் கொண்டு வருகிறது. சொத்துள்ளவர்கள்தான் விற்கிறார்கள். இல்லாதவர்களுக்குப் பாதகமில்லை. நில விலை ஜாஸ்தியாகப் போகிறது. விற்கிறவர்களுக்கு ஸ்டாம்பு டியூட்டி கொஞ்சம் அதிகமாகப் போட்டோம். வாங்குகிறவர்கள் கூட அதிக விலை கொடுத்து வாங்குகிறார்கள். விற்கிறவர்களும் கொடுக்கலாம், வாங்குகிறவர்களும் கொடுக்கலாம். அதையும் சேர்த்துத்தானே விலை பேசுகிறோம்.

கடைசியாக நகரங்களில் உள்ள நிலத்திற்கு வரி போடுவது. அதில் ஆட்சேபிக்க இடம் இல்லை. அதனால் நிலங்களை சர்வே செய்து போடலாம் என்று இருக்கிறோம். நிறைய நிலம் வைத்திருக்கிறார்கள். விலை ஏறிக்கொண்டே போகிறது. வெளியே நில வரி போடுகிறோம். இப்போது உயர்த்தியிருக்கிறோம். இதை

[திரு. எம். பக்தவத்சலம்] [7th July 1962

ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நகரத்தில் போட்டிருப்பது ரொம்பக் குறைவு. இந்த மன்றத்தில் கூட யாரும் அவ்வளவு கடுமையாக ஆட்சேபிப்பார்கள் என்று நினைக்கவில்லை. ஆட்சேபிக்க கொஞ்சமும் இடமில்லை. மற்றவர்கள் மாதிரி எதற்கெடுத்தாலும் ஆட்சேபிக்கிறவர்கள்கூட இதில் ஆட்சேபிப்பதற்கு இடமில்லை. தாங்க முடியாத சுமையைத் தாங்கச் சொல்லும் நிலை இல்லாத வகையில் வரிகளை நிர்ணயம் செய்திருக்கிறோம். யாருக்கும் ஒரு தொல்லையுமில்லாமல் வரி போட்டு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைச் சீராக நிறைவேற்ற வேண்டுமென்ற நோக்கத்துடன் வரிகளை விதித்திருக்கிறோம். இதற்கு மன்றத்திலுள்ள அங்கத்தினர்கள் தங்களது ஆதரவையும் ஒத்துழைப்பையும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**திரு. க. அன்பழகன்:** அமைச்சர் அவர்கள் பேசுகிறபோது நஞ்சை நிலத்திற்குப் பல இடங்களில் அதிகமாக வரி வாங்கப்படுவதால் அவைகளைச் சம நிலைக்குக் கொண்டுவர புதுவரி ஏற்படுத்தப்போவதாகத் தெரிவித்தார்கள். தமிழ்நாடு முழுவதும் ஒரே அளவில் வரி விகிதம் வரும்படி, சம நிலையில் வரி விதிக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

நகரத்தில் உள்ள நிலங்களுக்கு வரி விதிக்கும் போது பரப்பு அதிகமானால் அதிக வரியும், குறைந்த மனை இருந்தால் குறைந்த வரியும் விதிக்கப்படுமா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** சம நிலையில் இல்லை. ஆங்கிலத்தில் சொன்னால் "Nationalising, not equalising" இப்போது போடுகிற முறை அந்த பேசிஸ்ஸில் தான்.

நேற்று எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் ஹரிஜன நல இலாகா பற்றி சில விஷயங்களைக் குறிப்பிட்டார்கள். அதில் மாணவர்களை ஹரிஜன நல இலாகா டைரக்டர் தங்களுடைய ஹாஸ்டலில்தான் இருக்கவேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள் என்று குறிப்பிட்டார்கள். அதுபற்றிய நிலையை விளக்க விரும்புகிறேன்.

Dr. Lakshmanaswami Mudaliar referred to the delay in the disbursement of Harijan Welfare Scholarships.

It may be stated that the Government have already taken all adequate measures for the expeditious sanction and disbursement of scholarships. The Government have decentralised the State scholarships and have given powers to the District Welfare Officers to disburse scholarships. Only in regard to Government of India scholarships the Director of Harijan Welfare disburses the scholarships. The Government have also appointed Accounts Officers in the office of the Director of Harijan Welfare to make Internal Audit and facilitate sanction of Harijan Welfare scholarships expeditiously. The Government have also opened Personal

7th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

Deposit Account in the name of the Director of Harijan Welfare to enable him to draw cheques from the Reserve Bank of India so that the delay in the pre-audit of the Director's bills in the office of the Accountant-General and in the Pay and Accounts Office may be eliminated.

This system has been working satisfactorily for the past two years and the delay has been almost completely eliminated.

The Government have recently fixed lumpsum amount for payment of residential scholarships in the case of Scheduled Caste students.

The following are the rates on which residential scholarships are paid to Harijan students—

Arts and Science Courses—

Mofussil institutions Rs. 50.

City institutions Rs. 60.

Law Course Rs. 60.

Engineering and Medical Rs. 70.

Some students spent extravagantly over and above the amounts fixed by Government and some cases where hall tickets have been refused in the past years have been brought to the notice of Government.

In some cases, for example, in Annamalai University the Government have, as a special case, granted residential scholarships over and above the rates fixed by the Government in order to relieve the hardships of the students. But this sort of extravagant spending on the part of Harijan students should not be encouraged. That is why the Director has issued instructions that an amount spent by the students over and above the amounts fixed by the Government will have to be borne by the parents of the students.

The former M. C. Rajah hostel is now located in a pucca new building at Saidapet. The strength of the hostel has been increasing from 115 to 204. In order that Harijan students may avail of these hostel facilities and in order to prevent the contingency referred to above, namely, overspending by Harijan students, the Director of Harijan Welfare has issued instructions to Education authorities to see that the students avail of the hostel facilities given at the Saidapet hostel first before they are admitted into other hostels attached to the Educational Institutions. This will avoid the hardship referred to by Dr. Mudaliar at the time of the examination.

In all Government hostels under the control of Harijan Welfare departments, including the new Government hostel for College Boys at Saidapet, students belonging to Backward Classes

as well as forward communities are also admitted in the following proportion in order to avoid segregation of Harijans even in such hostels :—

Scheduled Castes—75 per cent of the strength.

Backward Classes—15 per cent of the strength.

Advanced Communities—10 per cent of the strength.

MR. CHAIRMAN : Before adjourning the House, I have to make a small announcement. A certain portion of the speech made by the hon. Member Sri Abdul Wahab has been objected to by some Members of the House. On an examination, I find that it is grossly unparliamentary and undignified. Of course, Sri Abdul Wahab is a new Member, perhaps inexperienced with these things. I do not call the language indecent. But, under the power vested in me, I have expunged the objectionable words he used.

The House will now adjourn and meet again at 3 p.m. on Monday, the 30th July 1962.

**The House then adjourned.**

### V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

164. *Notification issued with G.O. Ms. No.* 1389, *Food and Agriculture, dated 3rd April* 1962, *specifying 1st April* 1962 *as the date on which the Madras Land Improvement Schemes Act,* 1959 (*Madras Act* AE *of* 1959) *shall come into force in the whole of the State of Madras, except the territories specified in the Second Schedule to the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act,* 1959 (*Central Act* 56 *of* 1959).

165. *Finance Accounts of the Government of Madras for the year* 1960-61.